வெற்றி எட்டுத் திக்கும் எட்டக் கொட்டு முரசே!
வீரர் என்றும் வாழ்க என்று கொட்டு முரசே!

# தமிழ் முரசு

## பொருளடக்கம்

★










# தமிழ் முரசு

தொகுதி ௩ | திருவள்ளுவராண்டு ௧௯௮௦ பங்குனி | பகுதி ௪


# மந்திரிசபை மாற்றம்

எந்த நாட்டிலும், ஒரு அரசாங்கம் கவிழ்ந்து இன்னொரு அரசாங்கம் ஏற்படுவது இயற்கை. ஆனால், அச்செயல் மக்கள் புரட்சியால் நிகழுமே தவிர, ஒரு சில மனிதர்களின் சுயநலச் சூழ்ச்சியால் அல்ல. ஒரே கட்சியின் ஆட்சியில்கூட, அமைச்சர் குழு மாறுதற்கு, கொள்கை வேறுபாடு காரணமாயிருக்குமேயன்றி சொந்தக் குறைபாடுகள் காரணமாயிரா.

ஆனால், சென்னை மாகாணத்தில் இதற்கு நேர்மாறான காட்சியையே கண்டு வருகிறோம். இங்கு ஆண்டுக்கு ஒரு முறை அமைச்சர் குழு மாற்றப்பட்டு வருகிறது. இந்த மாற்றம் மக்கள் கருத்து வழி நிகழ்வதாகத் தெரியவில்லை. பிரகாசம் பிரதமராயிருந்த காலத்தில் பத்தே மாதங்களில் அவர் பதவியிழக்க நேர்ந்தது. அவர் எதற்காகப் பதவியிழந்தார் என்பதை இது வரை மக்கள் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. பிரகாசத்திற்குப் பிறகு ஓமந்தூரார் பிரதமராக்கப்பட்டார். இன்று அந்த ஓமந்தூராரும் பதவியிலிருந்து வெளியேற்றப் பட்டுவிட்டார். அவரை வெளியேற்றிய கூட்டத்தார் அதற்கான காரணத்தை மக்களுக்கு விளக்கிக் கூறவில்லை. பாசிஸக் கட்சியாரால் ஆளப்படும் நாட்டில்கூட இம்மாதிரி அரசியல் நெறிக்குப் புறம்பான வழியில் அமைச்சர் குழு மாறுவதை நாம் கண்டதில்லை; கேட்டதுமில்லை.

ஓமந்தூரார், எந்தக் கூட்டத்தாரால் பதவியில் அமர்த்தப் பட்டாரோ, அந்தக் கூட்டத்தாராலேயே அவர் இப்பொழுது பதவியிலிருந்து வெளியேற்றப் பட்டிருக்கிறார். இதற்கு ஓமந்தூரார் செய்த பிழை என்ன? பிரகாசம் ஆட்சியோடு ஓமந்தூரார் ஆட்சியை ஒப்பிட்டுப் பார்க்

குங்கால், மக்கள் பாராட்டத்தக்க வகையில் எத்தனையோ அரிய பெரிய காரியங்களை ஓமந்தூரார் மந்திரிசபை சாதித்திருக்கிறது.

சமீப காலத்தில், ஓமந்தூராருக்கு மாகாண மக்களிடையே ஏற்பட்டுள்ள செல்வாக்கு அளவிடற்கரியது. அப்படியிருந்தும் காங்கிரஸ் சட்டசபைக் கட்சியினர், தமது விருப்பத்துக்கு மாறாக ஓமந்தூரார் வெளியேறுமாறு கட்டாயப் படுத்தி விட்டனர். ஆம்; மக்கள் விரும்பும் ஒருவரை, மக்கள் பிரதிநிதிகள் வெறுக்கின்றனர். என்ன ஜன நாயகம்!

இந்த மந்திரி சபை மாற்றத் 'திருவிளையாட'லில் மக்கள் ஒரு விஷயத்தை மறந்துவிடக் கூடாது. மந்திரி சபையைக் கவிழ்ப்பதில் சூழ்ச்சிக்காரர்கள் வெற்றியடைகிறார்கள். ஆனால், தாம் விரும்பும் மனிதரைப் பிரதமராகக் கொண்டு வருவதில் அவர்கள் இதுவரை வெற்றியடையவே இல்லை. பிரகாசத்திற்கு எதிராக, முத்துரங்க முதலியாரை நிறுத்தி வைத்துத் தோல்வியடைந்தனர். அதற்குப் பிறகு இரண்டு முறை மந்திரி சபையை மாற்றி யமைத்திருக்கின்றனர். என்றாலும், இந்த இரண்டு முறையும் அவர்கள் விரும்பிய மனிதர்களில் எவரையும் பிரதமராக்க முடியவில்லை. ஓமந்தூராரும், திரு. குமாரசாமி ராஜாவும் சொந்தமாகச் சிந்தித்துச் செயலாற்றுகிறவர்கள். சுய நலக்காரரின் கைப்பாவைகளல்ல; அதனால்தான் ஓமந்தூரார் வெளியேற வேண்டி ஏற்பட்டது. நாளை திரு. குமாரசாமி ராஜாவுக்கும் இதே கதி நேருமானால் நாம் வியப்பதற்கில்லை. ஆம்; அன்று ராஜாஜி, நேற்று பிரகாசம், இன்று ஓமந்தூரார். நாளை.........?

பதவிக்கு வர விரும்பாதவர்களை வலுக்கட்டாயப்படுத்தி பதவியில் அமர்த்தி, பின்னர் பழிவாங்குவதென்பது அரசியல் நாணயமற்ற செய்கையாகும். காங்கிரஸ் எம். எல். ஏ-க்களுக்கு சொந்தமாகச் சிந்திக்கும் புத்தி இருந்திருந்தால், ஓமந்தூராரைப் போன்ற ஒரு உத்தமர் பதவியிழக்க நேர்ந்திருக்காது. ஓமந்தூராரை வெளியேற்றியதால் நஷ்டம் அவருக்கல்ல; நாட்டுக்கேயாகும். நாடாளும் திறமை பலருக்கு இருக்கலாம். ஆனால், நாணயத்தோடு ஆளும் ஆற்றல் ஒரு சிலருக்குத்தான் இருக்கமுடியும். அவர்களிலே தலைசிறந்தவர் ஓமந்தூரார். இன்று சட்டசபை காங்கிரஸ் கட்சி வெளியேற்றியிருப்பது ஓமந்தூராரையல்ல; ஒழுக்கத்தையேயாகும். ஒழுக்கத்தை விரும்பாத ஒரு கட்சிக்கு நாடாளும் உரிமை இல்லை என்பதை மக்கள் உணர்த்தி வைக்கும் காலம் வெகு தூரத்திலில்லை.

அசெம்பிளிக் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் ஓமந்தூரார் இறுதியாகப் பேசுகையில், "இந்த மாகாணத்தை யார் ஆளுகிறார் என்பதல்ல முக்கி

யம்; எது ஆளுகிறது என் பதுதான்" என உணர்ச்சி பொங்கக் கூறினர். ஆனல், துரதிர்ஷ்ட வசமாக "யார் ஆளுகிருர்கள் என்பதுதான் எங்களுக்கு முக்கியம்; எது ஆளுகிறது என்பதைப்பற்றிக் கவலேயில்லே" என்னும் முட்டாள்தனமான முடிவுக்கு அசெம்பிளி காங்கிரஸ் கட்சி வந்து விட்டது!

தமிழ் நாட்டு காங்கிரஸ் வாதிகளின் பொறுப்பு மகத்தானது. தெருவில் போகும் சாதாரண மனிதன் கூட கேவலமாகப் பேசும் நிலைமைக்கு இன்று காங்கிரஸ் வந்துவிட்டது. ஒரு சிலரின் சுயநலச் செயலால், எண்ணற்ற தேசபக்தர்கள் பாடுபட்டு வளர்த்த காங்கிரஸ், பழிப்புக்கு இடமாகி விட்டது. இதை ஒவ்வொரு காங்கிரஸ் வாதியும் வேதனையுடன் சிந்திக்க வேண்டும். சட்டசபை காங்கிரஸ் கட்சிக்கு வெளியேயுள்ள முற்போக்கு காங்கிரஸ்வாதிகள் ஒன்றுகூடி பிற்போக்கு வாதிகளிடமிருந்து காங்கிரசை மீட்க திட்டம் வகுக்கவேண்டும்.

திரு. குமாரசாமி ராஜாவை நாம் நன்கு அறிவோம். அவர் நெடுநாளைய காங்கிரஸ்வாதி. அரசியல் அனுபவமும் நிர்வாக ஆற்றலும் படைத்தவர். ஓமந்தூரார் ஆதாவுடன்தான் அவர் தலைவர் பதவியை அடைந்திருக்கிருர். எனவே, ஓமந்தூரார் காலத்தில் செய்யப்பட்டுள்ள முற்போக்கான காரியங்களைப் பாதுகாத்துவர குமாரசாமி ராஜா கடமைப் பட்டிருக்கிருர். குறிப்பாக, ஜமீன் ஒழிப்பு, இந்து மத அறநிலேயப் பாதுகாப்பு, கள்ளச் சந்தை ஒழிப்பு, வகுப்பு வாரி நியமனம் ஆகியவற்றில் அவர் கை வைப்பாரானல், மக்கள் பொங்கி எழுந்து புரட்சி செய்வரென்பது திண்ணம்.

பிரதமர் பதவியைத் துறந்து விட்ட ஓமந்தூரார் இத்துடன் ஓய்வு கொண்டுவிடக் கூடாது. எந்தத் தீய சக்திகள், தாம் வெளியேறக் காரணமாக இருந்தனவோ அவற்றிடமிருந்து காங்கிரசை விடுவிக்க திட்டமிட்டுச் செயலாற்ற வேண்டும். அப்படிச் செய்வாரென்றே நம்புகிறேம். அவர் தமது பதவிக் காலத்தில் செய்த நல்ல செயல்களால் மக்களிடையே செல்வாக்கு பெற்றுவிட்டார். அந்தச் செல்வாக்கைப் பயன் படுத்தி காங்கிரசைச் சீர்திருத்த முயலுமாறு வேண்டுகிறேம்.

---

# ஓட்டல்களும் நகரசபையும்



சென்னை நகர சபையின் 1949–50ம் ஆண்டுக்கான உத்தேச வரவு செலவுத் திட்டம் வெளியிடப்பட்டுள்ளது. அதன்படி சுமார் 15 லட்ச ரூபாய் துண்டு விழுமென எதிர்பார்க்கப்படுகிறது. நகர முன்னேற்றத்திற்கான புதிய செலவினம் எதுவும் வரவு செலவு திட்டத்தில் சேர்க்கப்படவில்லை. அப்படியிருந்தும் இவ்வளவு பெரிய தொகை துண்டு விழுவது நகர சபையின் பொருளாதாரச் சீர்குலைவையே புலப்படுத்துகிறது.

சென்னை நகரசபையின் வருவாயில் பெரும் பகுதியை நிர்வாகச் செலவே விழுங்கி விடுகிறது. நகர முன்னேற்றத்திற்காக நேரடியாகச் செலவாகும் தொகை மிகமிகச் சொற்பம். துண்டு விழும் தொகையை சரிக்கட்ட, வீட்டு வரியை உயர்த்தியிருக்கின்றனர் நகரசபையார். இதனால் பாதிக்கப்பட இருப்பவர்கள் வீடுகளைப் படைத்த பணக்காரர்களல்லர்; குடியிருக்கும் மத்திய தர வர்க்கத்தினரும் ஏழை மக்களுமே யாவர். ஏனெனில், வரி உயர்வைக் காரணம் காட்டி குடிக் கூலியை உயர்த்தி விடுவார்கள். இதுதான் வீடு படைத்தோரின் நெடு நாளைய வழக்கம். எனவே, வீட்டு வரியை உயர்த்திய செயல், ஏற்கனவே குடிக்கூலி உயர்வால் அல்லற்படும் நகர மக்களை மேலும் மேலும் தொல்லைப்படுத்துவதாகும்.

சென்னை நகரசபையின் பொருளாதாரக் கேட்டை சீர்படுத்த அதன் நிர்வாகச் செலவைக் குறைப்பதையே முதல் காரியமாகக் கொள்ள வேண்டும். பொறுப்பற்ற முறையில் செலவு செய்வது தவிர்க்கப்பட வேண்டும். கவுன்சில் அனுமதிக்கும் திட்டங்களை அதிகாரிகள் தாமதமின்றி நிறைவேற்றுவதாலும் செலவைக் குறைக்கலாம். தேவைக்கு அதிகமாகவே சிப்பந்திகள் இருந்து வருவதாகக் குறை கூறப்படுகிறது. இது உண்மையாயின், சிப்பந்திகளைக் குறைப்பதன் மூலமும் செலவைக் குறைக்கலாம்.

பொது மக்களுக்குத் தொல்லை கொடுக்காத வகையில் பொருளீட்டுவதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன.

மின்சார நிலையம், டெலிபோன், ரயில்வே முதலியவற்றை அரசாங்கம் மேற்கொண்டதால், நகரசபை இழந்துவிட்ட வருமானத்தை அரசாங்கமே ஈடு செய்ய வேண்டுமென்று வற்புறுத்த வேண்டும்.

நகரசபைக்கெனவே விதிக்கப்பட்ட தமாஷா வரியில் அரசாங்கம் எடுத்துக் கொள்ளும் ஒரு பகுதிப் பணத்தை நகரசபைக்கே கொடுத்து விடுமாறு கேட்டுப் பெறவேண்டும்.

சென்னை நகரசபை, தனது சக்திக்கு மீறிய வேலைகளை மேற்கொண்டுள்ளது. ஆரம்பப் பள்ளிகளையும் க்ஷயரோக ஆஸ்பத்திரிகளையும் நடத்துவதால் அதிக அளவுக்கு பணம் செலவாகிறது. இவை மக்களுக்குப் பயன் தரும் பணிகள்தான் என்றாலும் குறைந்த வருவாயுள்ள நகரசபை இவற்றை நடத்தி வருவதைவிட, பல கோடி ரூபாய் வருவாயுடைய அரசாங்கத்திடமே ஒப்படைத்து விடுவது நல்லது.

பெரிய அளவில் வருமானம் தரும் மற்றொரு வழியை 24-10-48 'முரசு' வார இதழ் தலையங்கத்தில் குறிப்பிட்டிருந்தோம். அது பின்வருமாறு :—

"கள்ளுக் கடைகளை ஏலத்தின் மூலம் குத்தகைக்கு விட்டு வந்தது போல காப்பிக் கடைகளையும் ஏலம் விட்டு குத்தகைப் பணம் வசூலிக்க வேண்டும். இதனால் வரும் வருமானம் விற்பனை வரியைப் போன்று ஆண்டு தோறும் உயர்ந்து கொண்டே போகும். நகர சபையின் செல்வ நிலையும் செழிப்படையும்".

ஓட்டல் தொழில், கோவணாண்டிகளைக் குபேரர்களாக்கும் கொள்ளை லாபம் தரும் வர்த்தகமாக இருந்து வருகிறது. வெளி மாகாணங்களிலிருந்து சென்னையில் குடியேறி ஓட்டல் நடத்திப் பொருள் சேர்ப்போரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருகிறது. பெரிய ஓட்டல்களெல்லாம் வெளி மாகாணத்தாரிடமே இருந்து வருகின்றன,

### திரு. ம. பொ. சி-யின்

## இலங்கைப் பயணம்



"தமிழ் முரசு" ஆசிரியர்—தமிழரசுக் கழகத் தலைவர்—திரு. ம. பொ. சிவஞானம் 4-4-49 அன்று ஆகாய விமான மூலம் இலங்கைக்குச் செல்லுகிறார். அங்கு சுமார் 3 வாரங்கள் சுற்றுப் பிரயாணம் செய்து சொற்பொழிவுகள் நிகழ்த்துவதுடன், ஹட்டனில் நடைபெறவிருக்கும் இலங்கை இந்தியர் காங்கிரசின் 9 வது ஆண்டு விழாவிலும் கலந்து கொள்வார்.

எனவே, திரு. ம. பொ. சி. அவர்களை பொதுக்கூட்டம் முதலியவற்றிற்கு அழைத்து சென்னைக்குக் கடிதம் எழுத வேண்டாம் என்று நண்பர்களனைவருக்கும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

நிர்வாகி, "தமிழ் முரசு"

நகரில் மதுவிலக்கு அமுல் நடத்தப்பட்ட பிறகு ஓட்டல் வருமானம் எதிர்பாராத அளவுக்கு அதிகரித்து வருகிறது. ஓட்டல் முதலாளிகள் விற்பனை வரிகூட செலுத்துவதில்லை.

ஓட்டல்களுக்கு வரி விதிக்கப் போவதாக சென்னை நிதியமைச்சர் அசெம்பிளியில் பேசியிருக்கிறார். அந்த வரிப்பணத்தை நகர சபைகளுக்கு வழங்கும் கருத்து அவருக்கு இருப்பதாகத் தெரியவில்லை. மேலும், ஓட்டல்களுக்கு வரி விதிப்பதால் மட்டுமே ஓட்டல் முதலாளிகளின் லாபத்திலிருந்து போதிய அளவு பங்கு பெற்றுவிட முடியாது. நகர சபைகளே ஓட்டல்களை எடுத்து நடத்த வேண்டு மென்று சிலர் கூறுகின்றனர். இந்த உணர்ச்சி பொதுவாக வரவேற்கத் தக்கதே. என்றாலும், ஸ்தல ஸ்தாபன அதிகாரிகள்—சிப்பந்திகளிடையே லஞ்சப் பழக்கம் ஒழிந்து கடமை உணர்ச்சி ஏற்படாத வரை, ஓட்டல் தொழிலை முனிசிபல் மயமாக்குவதால் லாபம் பெற முடியாது; நஷ்டமே விளையும்.

எனவே, இப்போதைக்கு ஓட்டல்களை ஏலத்தில் விட்டு பொருள் சேர்ப்பதோடு நிற்பதே புத்திசாலித் தனமாகும். இதை சென்னை நகரத்தில் மட்டுமன்றி, மாகாண முழுவதிலும் அமுல் நடத்தும் வகையில் அரசாங்கம் சட்டம் இயற்றித் தரவேண்டும், குறைந்த பட்சம் முனிசிபல் நகரங்களிலேனும் இந்த முறையைப் பரீட்சார்த்தமாக நடத்திப்பார்க்கலாம். ஓட்டல்களைஏலத்தில் விட்டு நகர சபைகள் பணம்திரட்டுவதை பொதுமக்களும்வரவேற்பார்கள். இதில் கிடைக்கும் வருமானம் முழுவதும் பொதுமக்கள் நன்மைக்கே செலவிடப் படுமல்லவா? மேலும், ஓட்டல்களின் குத்தகை வருமானம் அதிகப்படும் போது, குறைந்த வருமானமுள்ள வீடுகளின் வரியைக்கூட குறைக்கமுடியும். சென்னை நகர சபையாரும், மாகாண அரசாங்கத்தாரும் இதைப் பற்றி சிந்திப்பார்களாக.

# தமிழர் கூட்டம்

—(வானம்பாடி எழிலன்)—



பொங்கிவரும் புதுமையிலே புரட்சி நோக்கம்
புரண்டுவரும் வேளையில்தான், ஆட்சியாளர்
தங்கிவரும் இழிவினையே தளமாய்க் கொண்டு
தளைபோட்டு ஆளஎண்ணும் வெறியை மாய்க்க—
மங்கிவரும் தமிழினத்தின் மலர்ச்சி காட்டி,
மாத்தமிழர் மற்றவரின் ஆட்சிக் கூண்டில்
தொங்கிவரும் 'அடிமையினம்' என்ற பேச்சைத்
தொலைப்பதற்கு எழுந்ததுகாண் தமிழர் கூட்டம்!

'தார்'க்குழுவின் பேச்சுதனைத் தலைமே லேந்தி
தார்போட்டுத் திணிப்பதற்குத் தலைவர் என்போர்
'பேர்போன' தைரியத்தில் பிதற்றல் கண்டோம்;
பிறப்புரிமை கேட்குமொரு போர் முழக்கம்
யார்வந்து எதிர்த்திடினும் எதிர்த்தே ஓங்கும்!
எழுச்சியுற்ற தமிழினத்தை இன்னும் ஆள
'ஜார் வந்து அடக்கிடினும் 'ஜம்பம்' இங்கே
சாயா'தென் றுரைக்குதுகாண் தமிழர் கூட்டம்!

நாட்டுமொழி தனைவளர்த்தே நமது ஆட்சி
நாட்டுமொரு 'தமிழரசுக் கழகம்' கண்டே
காட்டுமுறை ஆட்சிவெறி கொடுமை எல்லாம்
கட்டோடு போக்குதற்குக் கொள்கை காட்டி—
கூட்டுவழிப் போதைதனில் குலைத்தே நாட்டை
குறியிழந்த தேசீயப் போர்வை காட்டும்
பூட்டுதனை உடைப்பதற்கே முரசங் கொட்டி
புதுமை என் விரையுதுகாண் தமிழர் கூட்டம்!

---

# நாட்டு நடப்பு

## அரசாங்கப் புலவர்

பண்டைத் தமிழ் வேந்தர்கள், தமிழ்ப் புலவர்களுக்குச் செய்த சிறப்பு கொஞ்சமன்று. கற்றுத் தேர்ந்த கவிஞர்களை அவைக் களப் புலவர்களாக அமர்த்தி அவர்களது கருத்து வழி கன்னித் தமிழ் வளர்த்தனர். வெறும் மொழி வளர்ச்சியில் மட்டுமன்றி, அரசியல் துறையிலும் நம் தமிழ்ப் புலவர்கள் அரசருக்கு அறிவுரை புகட்டுவோராயிருந்து வந்தனர். நாடு அடிமைப்பட்ட இடைக்காலத்தில், தமிழ்ப் புலவருக்கிருந்த அந்தச்சீரும் சிறப்பும் மறைந்துவிட்டன. தமிழ்ப் புலவரென்றாலே ஏளனம் செய்தனர் சில அரசியல்வாதிகளும், ஆங்கிலத்திற்கு அடிமைப்பட்ட மக்களும்.

ஆனால், இன்றைய சுதந்தர இந்தியாவில் அந்தக் குறை நீங்கிவிட்டது. சென்னை அரசியலார் தென்மொழிகளின் சார்பாக 'ஆஸ்தானக் கவி'களைத் தேர்ந்தெடுத்துள்ளனர். அதில் தமிழுக்கென கவிஞர் இராமலிங்கம் பிள்ளை தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இதை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம். நாமக்கல் கவிஞர் ஒழுக்க சீலர். உணர்ச்சி வயப்பட்டு தவறான பாதையில் செல்பவரல்ல. எதையும் நன்கு சிந்தித்து அந்தச் சிந்தனையில் கண்ட முடிவுப்படி செயலாற்றும் துணிவுள்ளவர். தமிழ்ப் புலமையோடு ஆங்கில ஞானமும் ஒருங்கே படைத்தவர். அரசியல், சமூக, பொருளாதாரத் துறைகளிலே அவர் காந்திய நெறியைக் கடைப்பிடிப்பவர். எனவே, அவரை அரசாங்கக் கவிஞராகத் தேர்ந்தெடுத்த சென்னை அரசியலாரைப் பாராட்டுகிறோம்.

'ஆஸ்தானக் கவிஞ'ரின் அலுவல்கள் என்ன; அதிகாரங்கள் யாவை என்பவற்றை அரசாங்கத்தார் விளக்கவில்லை; விரைவில் விளக்குவார்களென்று நம்புகிறோம்.

மொழித்துறையில், 'ஆஸ்தானக் கவிஞ'ரின் அறிவுரைகளுக்கு அரசாங்கம் மதிப்பு தரவேண்டும்.

தமிழகத்திலுள்ள சர்வகலாசாலைகளின் பட்டமளிப்பு விழாக்களில் 'ஆஸ்தானக் கவிஞர்' கௌரவிக்கப்பட வேண்டும்.



நாமக்கல் கவிஞர்.

கல்வித் துறையில் திட்டமிட்டுச் செயலாற்றும் 'செனேட்' போன்ற கழகங்கள் அல்லது கமிட்டிகளில் 'ஆஸ்தானப் புலவர்' அரசாங்கப் பிரதிநிதியாக சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

இன்னும் இது போன்ற உரிமை, பெருமைகளை 'ஆஸ்தானக் கவிஞ'ருக்கு அளித்தால் தான் அந்தப் பதவிக்கு சிறப்பு ஏற்படும். இது தனி மனிதருக்குத் தரும் பெருமையல்ல; தமிழ் மொழிக்குச் செய்யும் சிறப்பு. நாமக்கல் கவிஞர், தமக்கு அளிக்கப்படும் உரிமை பெருமைகளை பொறுப்புடன் போற்றிக் காப்பாரென்பதில் நமக்கு ஐயமில்லை. தேசிய உணர்ச்சியால், மக்கள் அவரைப் போற்றிய காலம் போய் விட்டது. இனி புலமை ஒன்றுக்காகவே மக்களால் அவர் போற்றப்பட இருக்கிறார். எனவே, நாமக்கல் கவிஞர் தமது கருத்து வழி கடமையைச் செய்வாரென்ற நம்பிக்கையுடன் அவரைப் பாராட்டுகிறோம்.

*　　*　　*

## தமிழுக்கு விடுதலை

மன்னர்களின் மடியிலே வளர்ந்த பெருமை ஒரு காலத்திலே நமது கன்னித் தமிழுக்கு இருந்தது. ஆனால், தமிழகம் அந்நியருக்கு அடிமைப்பட்ட பிறகுதமிழ், மடங்களில் அடைக்கலம் புகுந்தது. கவியரசர் பாரதியார் தோன்றி, தமிழை மடங்களிலிருந்து மீட்டு மக்களுக்குச் சொந்தமாக்கினர். ஆகாயத்



பாரதியார்.

தேவர்களின் பெருமையைப் பாடிய புலவர்களிலிருந்து வேறுபட்டு, அரசுரிமையின் அவசியத்தைப் பாடினர் பாரதி. ஆம், பாரதியின் தலைமுறையில்தான் தமிழ், மக்களின் பொதுவுடைமையாயிற்று. ஆனால், பாரதி மறைந்த பிறகு அவரது உறவினர்கள் பரம்பரை உரிமை கொண்டாடி பாரதியின் கவிதைகளை—இல்லை; கன்னித் தமிழை—தங்கள் தனிவுடைமை யாக்கிக் கொண்டனர். அத்துடனில்லாமல், வடநாட்டு மார்வாடியிடம் பாரதியின் கவிதையை அடகு வைத்துப் பொருள் திரட்டினர். அதன் காரணமாக, இசைத்தட்டுகளிலும் திரைப் படங்களிலும் பாரதி பாடலைப் பயன் படுத்தும் உரிமை மார்வாடிக்குச் சொந்தமாயிற்று. பின்னர் திரு. ஏ. வி. மெய்யப்ப செட்டியார், மார்வாடிக்கிருந்த உரிமையை விலை கொடுத்து வாங்கி தன்னுடைய

தாக்கிக் கொண்டார். மற்றும், பாரதி பாடல்களை பிரசுரிக்கும் உரிமை அவரது உடன் பிறந்தாரான திரு. விஸ்வநாதன் அவர்களுக்கும் அவரது ஆதிக்கத்திலுள்ள பாரதி பிரசுராலயத்திற்குமே சொந்தமாக இருந்தது.

இன்று அந்த நிலைமாறி சென்னை அரசியலார் பாரதியின் கவிதைகளை மீட்டு விட்டனர். ஆம், மக்களுக்காகப் பாடிய மக்கள் கவிஞனின் கவிதைகள் மீண்டும் மக்களுக்கே உரிமையாகி விட்டன. இவ்வகையில், சட்டத்தைக் காட்டிப் பிடிவாதம் செய்யாமல் தனது உரிமையை, நஷ்டஈடு கோராமலே விட்டுக் கொடுத்த திரு. மெய்யப்ப செட்டியாரை மனமாரப் பாராட்டுகிறோம்.

மற்றும், நமது, பாராட்டுக்குரியவர்கள் டி. கே. எஸ். சகோதரர்கள், பிரதமர் ஓமந்தூர் ரெட்டியார், பாரதி விடுதலைக் கழகத்தார் ஆகியோராவர். டி. கே. எஸ். சகோதரர்கள் தனிப்பட்டவர்களின் விருப்பு வெறுப்புகளைப் பாராமல் பாரதி பாடல்கள்மீது கொண்டாடப்படும் பரம்பரை உரிமையை உடைத்தெறியப் பாடுபட்டனர். பாரதி பாடல்கள் பொதுவுடைமையாக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கைக்கு பொது மக்களையும், பத்திரிகைகளையும் தூண்டுவதில் பாரதி விடுதலைக் கழகத்தார் இயன்றளவு முயன்றனர். இத்தகைய சூழ்நிலைதான் சென்னை அரசாங்கத்தாரைக் கண் விழிக்கச் செய்தது. ஆகவே, பாரதி பாடல்களை விடுவிப்பதன் மூலம் தமிழுக்கே விடுதலை தேடித்தரப் பாடுபட்ட யாவரையும் நாம் மனமாரப் பாராட்டுகிறோம்.

---

# அவமானச் சின்னங்கள்!

கு. மா. பா.

அந்நியர் ஆட்சிக்கு அடிமைப்பட்ட எந்த நாடும், என்றாவது ஒருநாள் விடுதலை பெற்றே தீரும். இது உலக வரலாறு காட் உண்மை. ஆனால், கத்தியின்றி ரத்தமின்றி யுத்த மெதுவும் புரியாமல் சத்திய நெறி நின்று, அகிம்சை முறையிலேயே ஆட்சியை மீட்பதென்பது இதுவரை எந்த தேசத்திலும் கண்டறியாத புதுமை; இந்தியாவில் மட்டுமே காந்தியடிகளின் தலைமையினால் ஏற்பட்ட பெருமை.

ஆயினும், அந்நியரை வெளியேற்றி அரசுரிமை பெற்றுவிட்டால் மட்டும் போதாது. அவர்களால் இங்கு நிலைநாட்டப்பட்ட அடிமைச் சின்னங்களையும் தொலைத்தாக வேண்டும். இல்லையேல், நாடு சுதந்தரம் பெற்ற பின்னும், மக்கள் மனதிலே 'சுதந்தரம் அடைந்தோம்' என்ற உணர்ச்சி பிறக்காது.

இந்தியாவில் நாம் காண்பதென்ன? இங்கிருந்து வெள்ளையர் அகன்ற பிறகும், அவர்களால் முன்பு நிறுவப்பட்ட அடிமைச் சின்னங்கள் இன்னும் அகற்றப்படவில்லை! குறிப்பாக, நம் தமிழ் நாட்டில்—அதிலும், தலை நகராகிய சென்னையில் மட்டுமே எண்ணற்ற சின்னங்கள், நமது கடந்த கால அடிமை வாழ்வை நினைவுறுத்திக் கொண்டு நிலைத்து நிற்கின்றன. அவை, ஆங்கில மொழியாலும், நம் மீது ஆதிக்கம் செலுத்திய ஆங்கில அதிகாரிகளின் பெயராலும் இருப்பது மட்டுமல்ல; விடுதலை வேட்கையை வெறி கொண்டு நசுக்கி, நம் நாட்டு தேசபக்தர்களை அணு அணுவாக வதை செய்த அந்தக் கொடுங்கோலரின் உருவச் சிலைகளாகவுங்கூட உயர்ந்து நிற்கின்றன.

முதலில் மக்கள் மன ஆறுதலுக்காகச் செல்லும் பூங்காக்களையே எடுத்துக் கொள்வோம். சென்னை நகரத்திலேயே தலைசிறந்தவையாக மூன்று பூங்காக்களைக் குறிப்பிடலாம். அவற்றின் பெயர்கள் 'பீப்பிள்ஸ் பார்க்' 'ராபின்ஸன் பார்க்,' 'நேபியர் பார்க்'! ஆங்கிலப் பெயராலும், ஆங்கில இனத்தின் சார்பில் நம்மை அடக்கியாண்ட அதிகாரிகளின் பெயராலுமே அவை இன்னும் நிலைத்திருக்கின்றன. அவற்றின் முன்புறத்தே காணப்படும் பெயர்ப் பலகைகளும், ஆங்காங்கு மரும் பூக்களுங்கூட நமது உணர்ச்சியற்ற தன்மையைப் பார்த்து கேலிச் சிரிப்பு காட்டுகின்றன!

சென்னை நகரின் சிறப்பான—மிக நீண்ட சாலைக்குப் பெயர் 'மவுண்ட்ரோடு'! தாமஸ் மவுண்ட்

என்னும் ஆங்கிலேயன் நம்மீது ஆதிக்கம் செலுத்தி ஒழிந்து போய் எவ்வளவோ காலமாகியும், அவனுடைய பெயர் நமது முக்கியமான சாலையில் இன்னும் ஒட்டிக் கொண்டிருக்கிறது.

சாலையின் பெயர் மட்டுமென்ன; நகரத்தின் இதயம் போன்றதும் சிறந்த வணிகப் பகுதியாக விளங்குவதுமான இடத்திற்கே 'ஜார்ஜ் டவுன்' எனும் பெயர்தான் இருக்கிறது. இந்தியாவை ஆக்கிரமித்து சுமார் 200 ஆண்டுகள் கொடுங்கோல் செலுத்திய பிரிட்டிஷ் பேரரசின் தலைவராகிய ஜார்ஜ் மன்னரின் பெயர், சுதந்தரம் பெற்று இவ்வளவு காலமாகிய பின்னும் இங்கு 'ஜார்ஜ் டவுன்' என்ற பட்டயம் தாங்கிக் கொண்டிருக்கிறது! மானக் கேடான இந்தச் சின்னத்தை மாற்றி, சுதந்தரப் போருக்கு தமிழகத்தில் வித்தூன்றிய வ. உ. சிதம்பரனாரின் பெயரை அந்த இடத்திற்கு வைக்க வேண்டுமென்று திரு. ம. பொ. சி. செய்த முயற்சியையும், நாட்டின் பல்வேறு இடங்களிலும் மக்கள் செய்த கிளர்ச்சியையும், சென்னை நகராண்மைக் கழகமோ அரசாங்கமோ பொருட்படுத்தவில்லை!

சுயமரியாதை உணர்ச்சியையும், சுதந்தர ஆர்வத்தையும் வளர்க்கும் கலைக் கழகங்களில் கூட இந்த அடிமை முத்திரைகள் இருந்து வருகின்றன. 'ஸ்டான்லி மெடிகல் கல்லூரி' 'லேடி வெல்லிங்டன் கல்லூரி' 'குவின் மேரீஸ் கல்லூரி' முதலிய பெயர்கள் இன்னும் ஆங்கில ஆதிக்கத்தின் நினைவால், நம் நாட்டு வாலிப உள்ளங்களை தினம் தினம் சுட்டுக் கொண்டிருக்கின்றன. அறிவை வளர்க்கும் கழகங்களிலா அடிமைச் சிந்தனையை வளர்ப்பது?

அந்நியரின் பெயர்களைத் தாங்கி நிற்கும் சின்னங்களன்றி, அவர்களின் உருவச்சிலைகளும் சென்னை நகரின் பல்வேறு இடங்களிலும் உறுதியாக நிற்கின்றன! சர். தாமஸ் மன்றோ, லார்டு வெல்லிங்டன் போன்ற மாஜி கவர்னர்கள், வெள்ளை சாம்ராஜ்யத்தின் தலைவரான ஐந்தாம் ஜார்ஜ் ஆகியோரின் சிலைகள் வீதிகளில் இன்னும் நொறுங்காமல், சிதையாமல் அப்படியே கம்பீரமாக நிற்பதைக் காணும்பொழுது மானமுள்ள ஒவ்வொரு தமிழனின் தலையும் வெட்கிக் குனிகிறது.

நகராண்மைக் கழகத்தாரால் நடத்தப்படும் பண்டக சாலைகளிலெல்லாம் பெரிதான ஒன்றுக்கு 'மூர் மார்க்கெட்' என்று பெயர்! ஆதியில் நகராண்மைக் கழகத்தின் முதல் தலைவனாக இருந்த சர். ஜார்ஜ் மூர் எனும் ஆங்கிலேயனின் பெயர், இப்பொழுது நம் தமிழ் இனத்தவரே தலைவராக விளங்கி வருங்காலத்திலும் அழிக்கப்படக் காணோம்? இன்னும், நகராண்மைக் கழகத்தில் முன்பு கமிஷனராயிருந்த ஒரு வெள்ளையன் பெயரால் 'கான்ரான்ஸ்மித் நகர்' என்று ஒரு பேட்டையும் இருந்து கொண்டிருக்கிறது! போதாக் குறைக்கு,

இன்றுள்ள நகராண்மைக் கழகக் கட்டடமே 'லார்டு ரிப்பன்' எனும் ஆங்கிலேயன் பெயரால் 'ரிப்பன் பில்டிங்'ஸ் என்றுதான் அழைக்கப்படுகிறது!

இவ்வாறு சென்னை நகரிலுள்ள பூங்காக்கள், சாலைகள், கட்டடங்கள், பேட்டைகள் முதலியவை அடிமைச் சின்னங்களாக இருப்பது மட்டுமல்ல; இன்று சென்னை சுதந்தர அரசாங்கம் நடைபெறுகின்ற அலுவலகமே 'செயின்ட் ஜார்ஜ்' என்ற ஆங்கிலப் பெயரைத்தான் தாங்கி நிற்கிறது. ஆதியில் கிழக்கிந்தியக் கம்பெனியை இங்கு வேரூன்றச் செய்து நம்மை அடிமைப் படுத்திய ஆதிக்க வெறியரிட்ட பெயர் நிழலில் அமர்ந்துதான், இன்றைய 'சுதந்தர ஆட்சியை' நமது அமைச்சர்கள் நடத்துகின்றனர்! வெள்ளைக் கொடுங்கோலர்கள் கோட்டை விட்டு ஓடிய பின்னும், வெறுப்புக்குரிய அந்தப் பெயர் நமது கோட்டையைச் சூழ்ந்து கொண்டிருக்கும் வெட்கக் கேடு இன்னும் நீங்கவில்லை!

இப்படியே சென்னை நகரெங்கும், நம்மை அடிமை கொண்டிருந்த வெள்ளையர்களின் பெயர்களும் சிலைகளும் நிறைந்திருப்பதைக்கூட ஒருவாறு நம்மால் சகித்துக் கொள்ள முடிகிறது. ஆனால், நமது சுதந்திரத்திற்காகப் போராடிய இரு பெரும் வீரர்களை — அஞ்சா நெஞ்சத்துடன் ஆங்கிலேயரை எதிர்த்து நின்ற அருந்தமிழ்க் காளைகளை — மிருகத்தனமாக வதைத்து, சித்திரவதை செய்து சீரழித்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கொடுங்கோலரின் சின்னங்களுங்கூட இன்னும் இந்த நாட்டில் இருப்பதை நினைத்தால்தான் நெஞ்சம் கொதிக்கிறது.

ஆம், கப்பலோட்டிய தமிழன் வீரச்சிதம்பரத்தை, கடுஞ்சிறைக்குள் போட்டு ஒடுக்கினர்; வள்ளலாகப் பிறந்த அவரை வறுமையில் வாடிச் சாக வைத்தனர்; உறுதியாக நின்று சுதந்தரம் கோரிய அவருக்கு, இரு ஜென்ம தண்டனைகளை வழங்கினர்; இரும்புக் கம்பிகளுக்குள்ளே அடைத்து வைத்துக் கொண்டு அவரை, கல் உடைக்கவும் செக்கு இழுக்கவும் ஏவிக் கொடுமைப் படுத்தினர். ஆதிக்கப் பேய்கள் புரிந்த இத்தனை அக்கிரமங்களுக்கும் மூல காரணமாக இருந்து, சிதம்பரனாரை மடக்கி வளைத்துக் கொடுத்தவன் ஆஷ் துரை.

அந்த ஆஷ் துரையின் பெயரால்தான் இன்றும் தூத்துக்குடி நகராண்மைக் கழக மண்டபம் ஒன்று விளங்குகிறது! சுதந்தர வேட்கையினால் சிதம்பரனார் தன் வாழ்க்கையையே எங்கு அழித்துக் கொண்டாரோ, அதே தூத்துக்குடியில்தான், சிதம்பரனாரின் ஜென்ம விரோதியாகிய ஆஷ் துரைக்கு நினைவுச் சின்னம்!

இது சிதம்பரனாரின் வீரத்தைப் பழிப்பதாகும்! அது மட்டுமல்ல; சிதம்பரனாருக்குச் செய்யப்படும் கொடுமையைச் சகியாமல் அந்த ஆஷ் துரையைச் சுட்

டுக் கொன்று, தற்கொலையும் செய்து கொண்டானே—அந்த வீர இளைஞன் வாஞ்சியின் தியாகத்தையும் அவமதிப்பதாகும். இந்த அவமானச் சின்னத்தைச் சகிக்க முடியாது. மானத்தையே உயிரிலும் பெரிதாக மதிக்கும் தமிழனால் ஒரு கணங்கூடச் சகிக்க முடியாது. தூத்துக்குடி நகராண்மைக் கழகத்தார், ஆஷ் துரையின் பெயரை அழித்துத் தொலைத்து விட்டு, அதற்கு 'வாஞ்சி மண்டபம்' என்று பெயரிடுவதே சரியான பிராயச் சித்தம். அதுதான் தேச பக்தியால் தன் இன்னுயிரைப் பலி யீந்த காளைக்கும் தகுந்த மரியாதை செய்வதாகும்.

வெள்ளை இனத்தவரை எதிர்க்கும் போராட்டத்தை இந்திய சரித்திரத்திலேயே முதன் முதலாக ஆரம்பித்து வைத்த வீரத் தமிழ் மன்னன் வீரபாண்டியக் கட்ட பொம்மன். அந்த உரிமைப் போருக்கு யுத்த பூமியாக விளங்கும் பெருமை பெற்றது பாஞ்சாலங்குறிச்சி தமிழ் நிலம். அத்தகைய வீரமணம் கமழும் மண்ணிலுங்கூட, அடிமைச் சின்னங்கள் நிலைத்திருக்கின்றன. கட்ட பொம்மனை அல்லற்படுத்தி அவனது ஆட்சியை அழித்து, இறுதியில், புவியாளப் பிறந்த அந்த வேந்தனை புளிய மரத்தில் தூக்கிட்டுக் கொன்ற வெள்ளைக் கூட்டத்தார் சிலரின் பெயரால், இன்னும் அங்கு நினைவுச் சின்னங்கள் இருக்கின்றனவாம்!

வெள்ளையர் ஆதிக்கத்தை எதிர்த்து முதல் சுதந்தரப் போர் புரிந்த நமது தமிழ் வீரர்களை, 'கொள்ளையர்' என்று பழித்தும், அவர்களை எதிர்த்துப் போரிட்டு மடிந்த லெப்டினன்ட் காலின்ஸ் போன்ற வெள்ளையரை 'வீரர்' என்று பாராட்டியும் எழுதப் பட்ட கல்வெட்டுகள் தென் பாண்டிநாட்டில் சில இடங்களில் இன்னும் இருக்கின்றனவாம்!

கேவலம், ராணுவ வெறி கொண்டு சிங்கப்பூரைப் பிடித்த ஜப்பானியர்கூட, அது தமது ஆதிக்கத்திற்கு வந்தவுடனே பழைய பெயரை மாற்றி 'ஷோனன்' என்று புதுப் பெயரிட்டனர். பழைய வரலாற்றை மாற்றியமைப்பது தான் புதுமை வாழ்வு என்பதைப் புலப்படுத்தினர். ஆனால், நமது நாட்டிலே அந்நியரின் சின்னங்கள் இருப்பதை மாற்றி நம் இனத்தவரையே பெருமைப் படுத்துவதற்குக்கூட இங்கே நமது ஆட்சியாளர்கள் அக்கறை கொள்ளக் காணோம்!

திருவிதாங்கூர் திவானாக இருந்து சர். சி. பி. செய்த நன்மைகள் பல; அது போலவே அவர் புரிந்த அடக்கு முறைத் தீமைகளும் உண்டு. அத்தகைய சி. பி. பதவியிலிருந்து வெளியேறியதும் திருவிதாங்கூர் அரசியலார், சர். சி. பி. யின் சிலையை மக்கள்பார்வையிலிருந்து அகற்றி விட்ட செய்தியைப் பத்திரிகையில் படித்தோம். சி. பி. நம் நாட்டவரானாலும்கூட, மக்

(சகூ-ம் பக்கம் பார்க்க)

# ஐக்கிய கேரளமா ?

# ஆதிக்க கேரளமா ?

(ம. பொ. சி.)

ஆந்திரர்கள் கடந்த 37 ஆண்டுகளாக தனி நாடு கோரி கிளர்ச்சி செய்கின்றனர். தமிழருக்குத் தனியரசு வேண்டுமென்ற கோரிக்கையும் முன்பே தோன்றி, இன்று அமைப்பு வழிப்பட்ட உரிமைப் போராக உருவெடுத்திருக்கிறது. ஆனால், ஆந்திரரின் கிளர்ச்சியும், தமிழரின் கோரிக்கையும் இன்னும் வெற்றி பெறவில்லை. அதற்குள், நேற்று தோன்றிய ஐக்கிய கேரளகோரிக்கை அமுலுக்கு வந்து விட்டது! திருவிதாங்கூர்—கொச்சி ஆகிய இரண்டு மலையாள சமஸ்தானங்களை ஒன்றாக இணைத்து விடுவதற்கு அந்த சமஸ்தான அரசாங்கங்கள் சம்மதித்து விட்டனவாம். இதன்மூலம் ஐக்கிய கேரளம் அமைக்கும் வேலை ஆரம்பமாகி விட்டதெனலாம். இன்னும், சென்னை மாகாணத்திலுள்ள மலபார் ஜில்லாவை திருவிதாங்கூர் — கொச்சியோடு சேர்த்து விட்டால் ஐக்கிய கேரள அமைப்பு வேலை அநேகமாக பூர்த்தியாகிவிடும்.

திருவிதாங்கூர் — கொச்சி இணைப்புக்கு அங்கு வாழும் மக்களின் ஒருமித்த ஆதரவு இருப்பதாகத் தெரியவில்லை. திருவிதாங்கூர் தமிழர்கள், தங்கள் ஏகோபித்த எதிர்ப்பை சமஸ்தான இலாகா செயலாளர் வி. பி. மேனனிடம் தெரிவித்தனர். திருவிதாங்கூர் மாஜி பிரதமர் பட்டம் தாணுப்பிள்ளையும் அவரைப் பின்பற்றும் மலையாளிகளும்கூட இந்த இணைப்பை ஆட்சேபித்துள்ளனர். மற்றும், திருவிதாங்கூரை சென்னைமாகாணத்துடன் ஐக்கியமாக்கிவிட வேண்டு மென்றும் ஆலோசனை கூறி யிருந்தனர்.

இந்த ஆட்சேபனைகளையும், ஆலோசனையையும் அலட்சியம் செய்து, இணைப்புத் திட்டத்தை அமுல் நடத்த முனைந்துள்ளார் வி. பி. மேனன்.

கொச்சியும் திருவிதாங்கூரும் சென்னை மாகாணத்தோடு இணைய வேண்டுமென்பது நமது எண்ணமல்ல; ஏனெனில், அச்செயல் மொழி வழி நாடுகளின் பிரிவினையை ஒத்திப் போட வேண்டுமென்பாருக்கு உதவி புரிவதாக முடியும். எனவே, திருவிதாங்கூர்—கொச்சி சமஸ்தானங்களை ஒன்றாக இணைப்பதைபொதுவாக வரவேற்பதோடு மலபார் ஜில்லாவையும் அதனுடன், இணைத்துவிட வேண்டும் என்றும் வற்புறுத்துகிறோம். ஆனால், வி. பி.

மேனனும், திருவிதாங்கூர் பிரதமர் நாராயண பிள்ளையும் மலபார் ஜில்லா விஷயத்தில் மௌனம் சாதிக்கின்றனர்!

> "மலையாள சமஸ்தானங்களின் இணைப்புக்கும், ஐக்கிய கேரள அமைப்புக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. சிறு சமஸ்தானங்களை ஒன்றாக இணைக்கும் கொள்கைப்படியே இது நடத்தப்படுகிறது"

என்கிறார் வி. பி. மேனன். அவரது கூற்று உண்மையானால், மலையாள சமஸ்தானங்களோடு மைசூர் (கன்னட) சமஸ்தானத்தையும் இணைத்து 'தென்னிந்திய சமஸ்தான யூனியன்' ஒன்றை அமைத்திருக்கலாமே! அப்படிச் செய்யாமல், மலையாள சமஸ்தானங்களை மட்டும் இணைப்பானேன்? அதுவும் மொழி வழி நாடுகள் பிரிக்கப்பட விருக்கும் நேரத்தில் இந்த இணைப்புக்கு அவசரப்படுவானேன்?

மலையாள சமஸ்தானங்களின் இணைப்பு அங்குள்ள மக்கள் சம்மதத்துடன்தான் ஏற்படுத்தப்படுகிறது என்கிறார் வி. பி. மேனன். அவரது கண்களுக்கு 'மக்கள்' என்பது வெறும் மலையாளிகள் கூட்டமாகவே தெரிகிறது போலும்! மொழி, கலை, பண்பாடு ஆகிய எல்லாவற்றாலும் தமிழ் இனத்தவர்களுக்கு மாறுபட்டவர்களாயிருக்கின்றனர் மலையாளிகள். இந்த இரு வேறு இனத்தவரைக் கொண்டதே இன்றைய திருவிதாங்கூர் சமஸ்தானம். ஆகவே, அந்த சமஸ்தானத்தின் எல்லை விஸ்தரிப்பு, அரசியல் மாற்றம் ஆகிய முக்கிய விஷயங்களில் ஒரு முடிவுக்கு வரும்போது அங்கு வாழும் தமிழினத்தவரின் கருத்துக்குத் தனிமதிப்பு கொடுக்க வேண்டும். இது அரசியல் ஞானமுடைய எவரும் ஆட்சேபிக்க முடியாத கோரிக்கை. ஆனால், வி. பி. மேனன் அப்படிச் செய்ததாகத் தெரியவில்லை. தமிழரின் ஆட்சேபணையைப் புறக்கணித்து மலையாளிகளின் கோரிக்கைப்படி திருவிதாங்கூர்—கொச்சி இணைப்பை ஏற்படுத்தத் துணிந்து விட்டார். ஒரு வேளை, தென் திருவிதாங்கூர் தமிழர் சார்பாகப் பேசும் உரிமை, வட திருவிதாங்கூரிலுள்ள மலையாளிகளுக்கே உரியது என்று வி. பி. மேனன் நமக்கு உணர்த்துகிறார் போலும்!

மலபார் ஜில்லாவை கொச்சி திருவிதாங்கூரோடு இப்போதே இணைத்திருப்பின், தென் திருவிதாங்கூர் பிரிவினை பற்றிய பிரச்னையையும் இப்போதே எடுத்துக் கொண்டிருக்கவேண்டும். அதைத் தட்டிக் கழிப்பதற்காகவே மலபார் ஜில்லாவை சென்னை மாகாணத்தில் விட்டு வைத்திருக்கிறார் வி. பி. மேனன். ஆம், வி. பி. மேனனின் உள்ளத்திலிருப்பது ஐக்கிய கேரளம்; சமஸ்தானங்களின் இணைப்பு என்பது வெறும் ஏமாற்றுப் பேச்சு.

நாஞ்சில் நாடு, திருவிதாங்கூரின் உணவுக் களஞ்சியம். மலபார் ஜில்லாவோ, பற்றாக்குறை

கள்

யான பஞ்சப் பிரதேசம். மேலும், அங்கு கம்யூனிஸ்டுகளின் தொல்லை அதிகம். 'மாப்பிளாஸ்தான்' கிளர்ச்சி வேறு. இந்நிலையில், தென் திருவிதாங்கூரை இழந்து மலபாரை இணைத்துக் கொள்வதில் பிரதமர் நாராயண பிள்ளைக்கும் வி.பி. மேனனுக்கும் உற்சாகமில்லை.

மலபார் ஜில்லாவிலுள்ள ஐக்கிய கேரள வாதிகளும் இந்த இணைப்பில் கலப்பதற்கு இனி அவசரப்படுவார்கள் என்று நம்புவதற்கில்லை. திருவிதாங்கூர்—கொச்சியோடு சேர்ந்து பட்டினி கிடப்பதைவிட இன்னும் சிறிதுகாலம் சென்னைமாகாணத்திலேயே இருந்துகொண்டு பசியின்றி வாழவே விரும்புவார்கள். மேலும், திருவிதாங்கூர்—கொச்சி சிறிய பிரதேசம். அதனோடு சேர்ந்தால் பதவிகளுக்கு தங்கள் இனத்தவராகிய மலையாளிகளுடனேயே போட்டியிட வேண்டும். அதைவிட, பெரிய 'தேச'மாகிய சென்னைமாகாணத்தோடு இணைந்திருந்து தமிழர்—ஆந்திரரோடு போட்டியிட்டு விகிதாச்சாரத்திற்கு அதிகமாகவே பதவிகளைப் பிடிக்கலாம். இதுதான் மலபார் ஜில்லா வாசிகளின் இப்போதைய எண்ணம்.

இதை வி. பி. மேனனும் அறிவார். அதனாற்றான் "மொழிவாரி மாகாணம் பிரிக்கப்படும்போது, தென் திருவிதாங்கூர், எந்த மாகாணத்தில் சேர்க்கப்பட வேண்டுமென்பதை முடிவு செய்ய அங்குள்ள தமிழருக்கு 'சுய நிர்ணய' உரிமையுண்டு" என்று வாய்ப்பந்த லிடுகிறார் மேனன். மொழிவாரிப் பிரிவினை காலம் வருவதற்குள் திருவிதாங்கூர் தமிழரின் கிளர்ச்சி ஒடுங்கி விடும்; அல்லது ஒடுக்கி விடலாம். அப்புறம் மலபார் ஜில்லாவையும் சேர்த்துக்கொண்டு குமரி முதல் கோகர்ணம் வரை ஆதிக்க கேரளம் அமைத்து விடலாம் என்று கனவு காண்கிறார். அப்படிக்கின்றி, நாணயத்துடன் நடப்பவராயிருந்தால் திருவிதாங்கூர் தமிழர்களோடு—அவர்களது கோரிக்கையை நிராகரிக்காதவகையில்—தற்காலிகமாக ஒரு சமரசம்காண வழியில்லாமல் போகவில்லை.

இணைக்கப்படும் மலையாள சமஸ்தான யூனியனில் திருவிதாங்கூர் தமிழரின் அந்தஸ்து, அதிகாரப் பதவிகள், கலாசார சுதந்தரம் ஆகியவற்றை வரையறுத்துக் கூறியிருக்கலாம்.

'சுய நிர்ணயம்' என்று, சந்தர்ப்பத்திற் கேற்றாற் போல் விளக்கம் செய்து கொள்ளக்கூடிய வார்த்தையைப் போட்டுக் குழப்பாமல், தமிழகம் தனியாகும்போது திருவிதாங்கூர் தமிழகமும் அதோடுசேரும் உரிமை அங்கீகரிக்கப்படும் என்று இப்போதே அதிகார பூர்வமாக வாக்குறுதி தந்திருக்கலாம். அப்படிக்கின்றி, மத்திய அரசாங்கத்தின் அதிகாரியாகியமேனன் மலையாளிகளின் ஆதிக்கத்திற்கு ஆதரவு காட்டி, தமிழரின் அடிமைத்தனத்திற்கு 'ஆசி' கூறி விட்டார்.

திருவிதாங்கூர் தமிழர்களின் பொறுப்பு மகத்தானது. அவர்களின் போராட்ட உணர்ச்சியில் மலையாளிகளுக்கு ஐயம் பிறந்துவிட்டது. இல்லையேல், தி. த. காங்கிரஸ் போராட்டத்திற்கு தேதி குறிப்பிட்டிருக்கும் நேரத்தில், அதற்கு அறைகூவல் விடுவது போன்று மலையாள சமஸ்தானங்களை இணைக்க முனைந்திருக்க மாட்டார் வி. பி. மேனன். இந்த சமஸ்தானங்களின் இணைப்பால், தமிழர்கள்மீது ஆதிக்கம் செலுத்தும் மலையாளிகளின் எண்ணிக்கை அதிகமாகி விடுகிறது.

புதிதாக அமைக்கப்படும் மலையாள சமஸ்தான யூனியன் சட்டசபையில் தமிழரின் எண்ணிக்கை மலையாளிகள் அலட்சியப்படுத்தும் அளவுக்குக் குறைந்து விடுமென்பதில் ஐயமில்லை. மேலும், இந்திய அரசாங்கத்தின் சமஸ்தான இலாகாவில் வி. பி. மேனன் அதிகாரம் வகிக்கும் வரையில் திருவிதாங்கூர் தமிழரின் சட்ட ரீதியான கிளர்ச்சியை மத்திய அரசாங்கம் மதிக்கப் போவதில்லை. திருவிதாங்கூர் தமிழருக்குள்ள ஒரே வழி, போராட்டம் துவங்குவதேயாகும். இல்லையேல், இனி என்றென்றும் அவர்கள் மலையாளிகளின் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற முடியாதென்பது திண்ணம். சென்னை மாகாணத் தமிழகத்தாரும், திருவிதாங்கூர் தமிழர் மேற்கொள்ளும் எந்த நடவடிக்கையையும் முழு மனதுடன் ஆதரிக்க வேண்டும்.

---

(கடு-ம்பக்கத் தொடர்ச்சி)

களின் விருப்பத்தைப் பெறுதவரென்பதாலேயே அவரது சிலையை வெறுத்தொதுக்கி விட்டனர். ஆனால், நமது ஆட்சியாளர்களோ, வெள்ளையர் அந்நியர் என்பது தெரிந்தும், அவர்கள் இங்கு நடத்திய ஆட்சி முறை ஆதிக்க வெறி கொண்டது என்பதை உணர்ந்தும், ஆங்கிலக் கொடுங்கோலரை நினைவுறுத்தும் அவமானச் சின்னங்களை அகற்றுவதற்கு இன்னும் முனையவில்லை.

கொடுங்கோலர்களின் சின்னங்களை அகற்றுவதுதான் மக்கள் மனதிலே, "உரிமை பெற்று விட்டோம்" என்ற உணர்ச்சியை வளர்க்கும். அடிமைச் சின்னங்களை அகற்றுவது, மக்கள் மனதில் அடிமைச் சிந்தனைகளை அகற்றுவதாகும். இனியேனும் நமது அரசியலார் இத்தகைய அவமானச் சின்னங்களை ஒழிப்பதற்கு உடனடியாக அக்கறை கொள்வார்களாக!

# திருவிதாங்கூர் தமிழருடையதே!

(கவிமணி. தேசிகவிநாயகம்)

"திருவிதாங்கூர், நாஞ்சில் நாடு" என்று கேட்டவுடன் பக்கத்திலிருக்கிற திருநெல்வேலிக்காரர்கள்கூட, இது ஒரு மலையாள நாடென்றும், இங்குள்ளவர்களெல்லாரும் மலையாளிகளென்றும், அவர்கள் பேசுவது மலையாளமென்றும் தீர்மானித்து விடுகின்றனர். இது முற்றிலும் தவறான கொள்கையாகும்.

திருவிதாங்கூர், சேரநாட்டின் ஒரு பகுதியேயாம். சேர அரசர்கள் யாவரும் செந்தமிழ் வேந்தர்களென்பதைச் சங்க கால இலக்கியங்கள் நமக்குக் காட்டவில்லையா? சேரமான் பெருஞ்சேரலாதன் முதலிய அரசர்கள் தமிழ்ப் பாடல்களுக்குப் பரிசிலாக நாடும், ஊரும்—ஏன், அரசாட்சியையுங்கூடக் கொடுத்தார்கள் என்பதைப் 'பதிற்றுப் பத்து' என்ற இலக்கியம் மூலம் அறிகிறோம்.

திருவிதாங்கூர் என்ற பெயர் வந்த வகையைப்பற்றி நினைக்கும் போது, சென்னையிலுள்ள 'ஹாமில்டன் பிரிட்ஜ்' 'அம்பட்டன் பிரிட்ஜ்' ஆன கதைதான் நினைவுக்கு வருகிறது! இது 'திருவிதாங்கூர்' அல்ல; 'திருவிதாங்கோடு' ஆகும். இதனை ஆங்கிலேயர் 'ட்ராவன்கோர்' என்றெழுதினார்கள். பின் மலையாளத்தில் எழுதும்போது அதனையே பெயர்த்துத் 'திருவிதாங்கூர்' என்றெழுதி விட்டார்கள். அவ்வளவுதான்.

இனி, 'திருவிதாங்கோடு' என்ற பெயர்தான் எப்படி வந்தது என்று சிந்திக்க வேண்டும். கல்வெட்டுகளில் 'முதாங்கோடு' என்ற பெயர் காணப்படுகிறது. வேள்விக்குடிச் செப்பேட்டில் 'செங்கோடியும் புதாங்கோட்டும் செரு வென்றவர் சினந் தவிர்த்து' என வருகின்றது. முதாங்கோடு என்றதும் புதாங்கோடு என்றதும் ஒன்றைத்தான் குறிக்கின்றன. ஏனென்றால் வட்டெழுத்தில் 'பு' வுக்கும் 'மு' வுக்கும் வரி வடிவில் அதிக வேறுபாடு இல்லை. இவற்றில்

---

[திருவிதாங்கூர் நிலத்தோடு தமிழினத்தாருக்குள்ள நீண்ட காலத் தொடர்பை விளக்கி, கடந்த எழுத்தாளர் மாநாட்டில் கவிமணி ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம் இது. தமிழினத்தார் இப்பொழுது தெற்கு முனையில் நடத்திவரும் உரிமைப் போருக்கு கவிமணியின் கருத்துக்கள் உரம் தருவனவாகும். ஆ–ர்.]

---

ஒன்றை இன்னொன்றாக வாசிக்கும்போது தவறுதல் உண்டாவது இயற்கை. ஆகவே, 'திருமுதாங்கோடு' என்ற பெயரே திருவிதாங்கோடு எனத் திரிந்திருக்கலாம்.

இந்த நாட்டிலுள்ள கல்வெட்டுகள், செப்பேடுகள் முதலியவற்றைப் பார்த்தால், திருவிதாங்கூர் ஓர் தமிழ்நாடு என்பதைச் சந்தேகமறத் தெரிந்து கொள்ளலாம். ஒரு நாட்டிலுள்ள கல்வெட்டு, செப்பேடு, ஓலைப் பிரமாணம் முதலியவை சாதாரணமாக அந்நாட்டில் வழங்கிவரும் மொழியிலேதான் எழுதப்பட்டிருக்கும் என்பது யாவரும் அறிந்த உண்மை. 'முன்சிறை' யில், கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் ஆண்ட, கோக்கருநந்தடக்கன் என்ற ஆய் அரசன் காலத்துச் செப்பேடு ஒன்று வெளியாகி இருக்கிறது. அதில் அம்மன்னன், 'பார்த்திப சேகரபுரம்' என்று தன் பெயரால் கோவில் ஒன்று கட்டி, வேத அத்யயனத்துக்கென உயர்தரக் கல்லூரி ஒன்றும் ஏற்படுத்தித் தானம் விட்ட செய்தி குறிக்கப்பட்டிருக்கிறது.

'விழிஞம்' என்ற ஊர் இராஜேந்திர சோழ தேவனது ஆட்சியின் கீழ் இருந்தது. அதற்கு 'விழிஞமான ராஜேந்திர சோழ பட்டினம்' என்பது பெயர். இது பற்றிய ஆதாரங்கள், கல்வெட்டுகள் முதலியவை இருக்கின்றன. திருநந்திக்கரையில் இராஜராஜ சோழன் கல்வெட்டு இருக்கிறது. அதில் அவன் தன் பிறந்த நாளான ஐப்பசி மாதச் சதய நாளில் திருவிழா நடத்துவதற்கு நிபந்தம் விட்ட செய்தி குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

சிறிது காலத்திற்கு முன்னால் மலபாரிலிருந்து ஒரு எட்டுப் பிரதி கிடைத்தது. அது வட்டெழுத்தில் எழுதப்பட்ட திருவாய்மொழி ஏடு. இதைத் தாம் நேரில் பார்த்ததாகக் காலஞ்சென்ற கே. ஜி. சேஷையர் என்னிடம் சொன்னார்.

மலைநாட்டில் பாடகம் சொல்லும் வழக்கம் இருக்கிறது. அஃதாவது காவியம், இதிகாசம், புராணம் என்பவற்றிலுள்ள யாதேனும் ஒரு பகுதியை எடுத்துக் கொண்டு ஆடிப் பாடி அபிநயித்துக் காட்டுவதாகும். இதற்குக் கம்ப ராமாயணப் பாடல்களைப் பயன்படுத்தி வந்ததாகப் பழைய ஏடுகள் கொண்டு அறிய முடிகிறது.

திருவிதாங்கூர் அரசாங்கத்தார் 'வலை வீசு புராணம்' என்றொரு ஏட்டுச் சுவடியைப் புத்தகமாகப் பதிப்பித்திருக்கிறார்கள். இது மலையாள எழுத்தில் பதிப்பிக்கப்பட்டிருப்பினும், பாடல்களெல்லாம் தூய தமிழ். கதை, திருவிளையாடற் புராணத்திலுள்ள வலை வீசு படலத்தைத் தழுவியது.

அரண்மனையிலுள்ள கையெழுத்துப் பிரதிகளிலிருந்து சமீபத்தில் ஒரு ஏடு கிடைத்தது. அரிச்சந்திரன் கதையை வெண்பாவி

ஞல் எழுதப்பட்ட ஏடு இது. இந்தச் சுவடியின் பிரதி வேறு எங்கும் இருப்பதாகத் தெரிய வில்லே.

நாஞ்சில் நாட்டைப்பற்றியும் சில சொல்ல ஆசைப்படுகிறேன். இது நஞ்சை மிகுந்த வளநாடு. நாஞ்சில் வள்ளுவன் ஆண்ட நாடு. மாமதில்போல் மலே ஆளும் நாடு; வானம் மாதம் மும்மாரி பொழியும் நாடு.

பண்ணே பெருத்த பழநாடு
—சுற்றிப்
பார்த்திடக் கண்குளிரும் நாடு,
மண்ணேயும் பொன்னுக
மாற்றும் நாடு—கவி
வாணர் புகழும் தமிழ்நாடு.

நாஞ்சில் வள்ளுவன் செய்தி புறநானூற்றுல் அறியப்படுவது. ஆகவே, அதனேடு ஒத்த பழைமையுடையது இந்நாடு. சங்க இலக்கியங்களில் பஃறுளி என்று கூறப்படும் ஆறுதான் இந்நாட்டை வளப்படுத்தும் பழையாறு. இதன் முதல் அணே 'தலேயணே' என்று சொல்லப் படும். பாண்டியன் கட்டியது ஆத லால் 'பாண்டியன் அணே' என் றும் கூறுவர்.

இதற்குக் 'கோட்டாறு' என் றும் பெயருண்டு. பழையாறு என்ற பெயர் பிற்காலத்தில் ஏற் பட்டதுதான். நாஞ்சி நாட்டுப் புத்தனுறு என்ற சிற்றுறு பிற் காலத்தில் வெட்டப்படவே, தாய் நதியான இது பழையாறு என்ற பெயரைப் பெற்றது. இதனே நாஞ்சில் நாட்டுக் காவேரி என்று கூறினும் பொருந்தும். கோடை யிலும் பல் றுளி நிறைந்து நீர்வளம் சுரக்கும் காரணத்தால் பஃறுளி எனப்பட்ட ஆறே நாஞ்சிலின் செழுமைக்குக் காரணமான பழையாறு என் பதை, நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

கல்வெட்டுகளிலும் இலக்கியங் களிலும் கோட்டாற்றைப் பற்றி மிகுதியும் சொல்லப்பட்டிருக் கின்றன. இராஜ ராஜ சோழன் இதைக் கைப்பற்றிய காலத்தில் இதற்குக் 'கோட்டாருன மும் முடி சோழபுரம்' எனப் பெயர் கொடுத்தான். இராஜேந்திர சோழன், இராஜாதி ராஜன், குலோத்துங்க சோழன் முத லானவர்களுடைய ஆட்சியின் கீழும் கோட்டாறு இருந்ததாகத் தெரிகிறது.

இந்நகரத்தின் ஒரு பகுதி யான ஒழுகினசேரியின் பக்கத்தி லுள்ள இடத்திற்குச் 'சோழ புரம்' எனப் பெயர் ஏற்பட்டதும், அங்கே 'இராஜேந்திர சோழீ சுரம்' என்ற கோவில் அமைந்த தும், பழையாற்றில் 'சோழன் கட்டு அணே' கட்டப்பட்டதும், இச்சோழர்களின் ஆட்சிக் காலத் திலாயிருக்க வேண்டும். சோழர் களின் நிலப்படை இங்கிருந்த தாகவும் இலக்கியங்களாலும் கல் வெட்டுகளாலும் அறியக் கிடக் கின்றது.

இவ்வூரை விட்டுச் சுசீந்திரத் தைப் பற்றி ஆராய்வோம். தாணு மாலப் பெருமான் கோவிலே யுடைய பழமையான தலம் இது,

பாண்டியர், சோழர், சேரர், விஜய நகர வேந்தர், நாயக்க அரசர் என்பவர்களுடைய கல் வெட்டுகள் இங்கே ஏராளம் இருக்கின்றன. சோழ அரசர்களின் ஆட்சிக் காலத்தில் இது 'சுசீந்திரமான சுதந்தர சோழ சதுர்வேதி மங்கலம்' என்றழைக்கப்பட்டது. பாண்டியன் ஆட்சியில் வந்த போது 'சுந்தர பாண்டிய சதுர் வேதி மங்கலம்' எனப்பட்டது. வீரகேரள மன்னன் கல் வெட்டு இதனை 'வீரகேரள சதுர்வேதி மங்கலம்' எனக் குறிப்பிடுகின்றது. இங்கு நூற்றுக்கு மேற்பட்ட கல் வெட்டுகள் இருக்கின்றன. வடமொழியிலுள்ள ஒன்றிரண்டைத் தவிர மீதியெல்லாம் தமிழ்.

கோவில் சந்நிதியின் முன்னுள்ள ஒரு மண்டபத்தின் பெயர் 'வீரபாண்டியன் மணி மண்டபம்'. அதை அடுத்துள்ள இன்னொரு மண்டபத்திற்கு 'செண்பகராமன் மண்டபம்' என்று பெயர். அதில் தென் பகுதியில் — அதாவது, பெருமாளுக்கு முன்னுள்ள பகுதியில் —விஷ்ணுவின் லீலைகள் பலவும் சிற்பத்தில் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் இராமாயணக் கதையும் ஒன்று. சிற்பத்தின் சில குறிப்புகளைக் கொண்டு அது கம்ப ராமாயணக் கதையைப் பின்பற்றிச் செய்யப்பட்டது என்று அறியலாம்.

கன்னியா குமரி பண்டைக் காலத்தில் 'குமரி' என்றே அழைக்கப்பட்டு வந்தது. பண்டை இலக்கியங்களிலும் யாத்திரிகர்களுடைய குறிப்புக்களிலும் இதைப் பற்றிய செய்திகள் அறியக்கிடக்கின்றன.

கன்னியா குமரியும் அதைச் சூழ்ந்துள்ள இடமும் கல் வெட்டுக்களில் 'புறத்தாய நாடு' என்று சொல்லப்படுகிறது. "இராஜ ராஜப் பாண்டிய நாட்டு சோழ வளநாட்டுப் புறத்தாய் நாடு" என்னும் தொடரை நோக்குக. 'குமரிச் சேர்ப்பன்' என்பது பாண்டியன் பெயர்களுள் ஒன்று. பகவதி நாய்ச்சியார், பராந்தக பாண்டியன் சாசன மொன்றில், 'தென்னவர்தம் குல தெய்வம்' என்று குறிக்கப்பட்டிருக்கிறாள். கோவிலில் சோழர், பாண்டியர், விஜய நகர வேந்தர்கள், நாயக்க அரசர்கள், திருவிதாங்கூர் அரசர்கள் ஆகியோருடைய கல் வெட்டுகள் இருக்கின்றன. 1766-ல் தான் கன்னியா குமரி திருவிதாங்கூரோடு சேர்ந்தது.

இந்நாட்டிலுள்ள எந்தப் பழைமையான கோவிலுக்குச் சென்றாலும், கோவில் சுவர்கள் தமிழ் மொழியில் தங்கள் வரலாறுகளை எடுத்துக் கூறுவதை அறியலாம்.

இவ்வளவு ஆதாரங்களும் கொண்டு இது மலையாள நாடா அன்றித் தமிழ் நாடா என்பதைப் பற்றி முடிவு கட்டவேண்டும்.

---

உ.ந.

# ஆதிக்கக் கேரளம்



மலையாளிகளின் ஐக்கிய கேரள கோரிக்கை, தமிழரசுவாதிகள் ஆதரிக்கக் கூடியதுதான். வடதிருவிதாங்கூர்—கொச்சி சமஸ்தானங்களும், மலபார் ஜில்லாவும் பிரஞ்சிந்தியப் பிரதேசமாகிய 'மாஹி'யும்தான் ஐக்கிய கேரளத்தில் அடங்கியிருக்க முடியும். ஆனால், தார் கமிஷன் முன்பு ஐக்கியகேரள கமிட்டி சமர்ப்பித்த அறிக்கையில் தமிழ் நாடு, கன்னட நாடு ஆகியவற்றின் பகுதிகளையும் சேர்த்து 'ஆதிக்கக் கேரளம்' கோரியுள்ளது. அதன் விவரம் வருமாறு:—

| | சதுரமைல் | மக்கள் |
|---|---|---|
| திருவிதாங்கூர் | 7662 | 6070018. |
| கொச்சி | 1493 | 1422875. |
| மலபார் | 5795 | 4209425. |
| மாஹி | 25 | 20000. |
| லகாடிவ், அமான்டிவ் (தீவுகள்) | 13 | 4082. |
| குடகு | 1593 | 168706. |
| **கன்னடத்தில்...** | | |
| காசர்கோடு தாலுகா | 767 | 342301. |
| துளு தாலுகாக்கள், குண்டப்பூர், உடுப்பி, காரக்கால், புத்தூர், மங்களூர். | 3521 | 1146969. |
| **தமிழகத்தில்...** | | |
| உதகமண்டல தாலுகா மேற்குப் பகுதி | 400 | 37000. |
| கூடலூர் தாலுகா (நீலகிரி) | 280 | 71900. |
| அஞ்சேங்கோ தங்கச்சேரியுடன் (திருநெல்வேலி) | 250 | 5000. |

## தமிழ் மக்களே எச்சரிக்கையாயிருங்கள்!

# "தமிழால் பிழைத்தேன்"

(எம். லட்சுமிபதி)



இந்தியாவுக்குப் புறப்படுவதற்கான ஏற்பாடுகளனைத்தையும் வெகு துரிதமாகச் செய்து கொண்டிருந்தார் அருணசலம். அவரது வட்டிக்கடையில் அடைக்கலம் புகுந்திருந்த நகைகளும், இந்தியாவில் செலாவணியாவதற்கேற்ப மாற்றப்பட்ட தொகைகளும் கடற் பிரயாணத்திற்கு ஆயத்தமாகப் பத்திரப்படுத்தப்பட்டன. வழிச் செலவுக்குத் தேவையான பணத்தை மட்டும் தனியாக 'மணிபர்ஸில்' வைத்து 'கோட்' டைக்குள் செருகிக் கொண்டார்.

அவருடைய கடையின் ஏஜண்டான கந்தசாமியோ, முதலாளியின் (மூன்று) மனைவிகள், மக்கள், உறவினர் ஆகியோருக்காக வாங்கப்பட்ட உயர்தர ஆடைகள், பிஸ்கெட்டுகள், பொம்மைகள், சாக்லெட்கள் முதலியவற்றை ஜாக்கிரதையாக அடுக்கி வைத்துப் பெட்டிகளையும், படுக்கையையும் தயார் செய்வதில் ஈடுபட்டிருந்தார். அவருடைய கைகள் தான் இந்த வேலைகளை யந்திரம் போல் செய்து கொண்டிருந்தனவே யன்றி, கருத்து சிறிதளவும் அங்கு இல்லவே இல்லை.

இந்தியாவுக்கும் இலங்கைக்கு மிடையேயுள்ள சிறு கடலைத் தான் அனுமார் தாண்டியதாக இராமாயணத்தில் படித்திருக்கிறோம். ஆனல், கந்தசாமியின் மனக்குரங்கோ பல நூறு மைல் தூரம் விரிந்து கிடக்கும் பெருங் கடலையே ஒரு கணத்திற்குள் தாண்டிப்போய் ஆசை மனையாளின் நினைவிலும் அருமைக் குழந்தையின் பாசத்திலும் பின்னிக் கொண்டது.

கந்தசாமி, இந்தியாவிலிருந்து கிளம்பி இந்த அருணசலத்தின் கடைக்கு ஏஜண்டாக வந்து ஐந்து ஆண்டுகளுக்கு மேலாகி விட்டன. அப்பொழுது, எழுந்து நடக்கத் தெரியாமல் தவழ்ந்து விளையாடிக் கொண்டிருந்த அவருடைய ஒரே செல்வமகன், இப்பொழுது தமிழ் நாட்டின் வளம்பொருந்திய மண் தெருக்களிலே தளர் நடை போட்டுத் திரிய ஆரம்பித்து விட்டான். "அம்மா" என்ற சொல்லையே அரை குறையாக உளறிக் கொண்டிருந்த அவன், "அப்பா எங்கே?" என்று மழலை மொழியால் கேள்வி போடவும் முனைந்து விட்டான்!

அருமைக் குழந்தையின் இத்தகைய வளர்ச்சியைப்பற்றி சில வாரங்களுக்கு முன்புதான் விவரமாகக் கடிதம் எழுதியிருந்தாள் கந்தசாமியின் மனைவி செல்லம்

மாள். அத்துடன், குழந்தையும் தானுமாக இருந்து எடுத்த படம் ஒன்றையும் இவருக்கு அனுப்பியிருந்தாள். அதை நினைந்து நினைந்து பெருமூச்சு விட்டார் கந்தசாமி. மகனின் வளர்ச்சி அவருக்கு மகிழ்ச்சி யளித்தது. ஆனால், தன் மனையாளின் மாறுதலோ மன வேதனையையே தூண்டியது. ஏனெனில், குழந்தையின் மாறுதல் வளர்பிறையைப் போன்றது. செல்லத்தின் வளர்ச்சியோ தேய்பிறையாகத் திரும்பி விட்டது! ஆம், அவளது நெற்றியில் நெளிந்து விளையாடும் கருங்கூந்தலிலே, இப்பொழுது சில 'வெள்ளிக் கம்பி' களும் மின்ன ஆரம்பித்து விட்டதை அந்தப் படத்தின் மூலம் அவர் தெரிந்து கொண்டார்!

மனையாளின் இளமையும், குழந்தையின் பிள்ளைப்பருவக் குறும்புகளும், தன்னால் அனுபவித்து மகிழ முடியாமலேயே வீணாகின்றனவே என்று நெஞ்சம் குமுறினார். முதலாளி அருணாசலத்துடன் தானும் புறப்பட்டு இந்தியாவுக்குச் சென்று இப்பொழுதாவது அந்தக் களிப்பை யெல்லாம் கரை காண வேண்டுமென்று ஆசைப்பட்டார். ஆனால், முதலாளியின் மனம் ஒப்பவில்லை. "இன்னும் நமது கடைக்கு வரவேண்டிய கடன் ஏராளமாயிருக்கிறது. அதையெல்லாம் விட்டுவிடக் கூடாது. அந்தப் பாக்கி முழுவதையும் வசூல் செய்த பிறகு நீங்கள் வந்து சேருங்கள்!" என்று கட்டளை யிட்டார் அருணாசலம்.

கந்தசாமியின் உள்ளம் காற்று போன பலூனைப்போல் சுருங்கிச் சொட்டையாயிற்று. "இன்னும் எத்தனை நாட்களுக்கு இப்படி அஞ்ஞாத வாசமோ?" என்று ஏங்கினார். ஆயினும், முதலாளியின் உத்தரவை மீறிக் கிளம்புவதற்கு அவர் துணியவில்லை. அந்த ஏழை நெஞ்சத்திற்கு, அடிமை முத்திரையை உடைத்தெறியத் தெம்பு ஏது?

ஆகவே, இன்னும் சில மாதங்களையும் இங்குதான் கழித்துத் தொலைய வேண்டும் என்று தனக்குத்தானே சமாதானம் கூறிக்கொண்டார் கந்தசாமி. இந்த ஐந்து ஆண்டுகளை எப்படியோ போக்கிவிட்ட அவருக்கு, இன்னும் சில மாதங்களையும் ஒருவிதமாக ஓட்டிவிடலாம் என்ற தைரியமும் இருந்தது. ஆனால், தமது வட்டிக்கடை இருக்கிற வட்டாரத்திலே கொஞ்சகாலமாகச் சூழ்நிலை மாறிக் கொண்டிருந்தது. பயங்கரமான முறையில் பணக்காரர்களைத் தாக்கிப் பொருள் பறிக்கும் நோக்கத்துடன் கொள்ளைக் கூட்டத்தினர் பலர் திட்டமிடுவதாகப் பேசிக் கொள்ளப்பட்டது.

அந்தக் காரணத்தினால்தான் முதலாளி அருணாசலம், அவசரமாய் இந்தியாவுக்கு மூட்டை கட்டலானார். அகப்பட்ட வரையில் சேர்த்துக்கொண்டு அவர் பிறந்த நாட்டுக்குப் புறப்பட்டு விட்டார். இன்னும் வசூலாக வேண்டிய பாக்கியையும் சேகரித்துக்கொண்டு வருவதற்குக் கந்த

சாமியை வைத்துவிட்டுச் சென்றார். உயிரையே பணயம் வைத்தாவது இயன்றவரையிலும் முதலாளிக்குச் சேர்த்துக் கொடுக்கவே 'பிறவி எடுத்த' ஏழைக் கந்தசாமி, 'ஏஜண்டு' என்ற பெயர்ப் பெருமையுடன், தமது தீவாந்தர வாசத்தை மீண்டும் நீடிக்க நேர்ந்தது.

* * *

கப்பல் புறப்பட்டு விட்டது முதலாளி அருணாசலம், கப்பலின் மேல்தளத்திலே உல்லாசமாக உலவிக்கொண்டிருந்தார். கண் இமைக்காமல் அதைப் பார்த்துக் கொண்டே கரையில் நின்றார் கந்தசாமி. இசைபாடித் தாலாட்டும் அலைகளின் மீது அசைந்தாடிக்கொண்டு ஆனந்தமாகச் சென்றது கப்பல்.

சிறிது நேரத்தில் கப்பலின் உருவம் கண்ணுக்குத் தெரியாமல் மறைய ஆரம்பித்தது; பின்னும் சற்று நேரத்தில் கப்பலின் புகைகூட கொஞ்சங் கொஞ்சமாக மறைந்து விட்டது. ஆனால், கந்தசாமியினுடைய நெஞ்சம் புகைவது மட்டும் அடங்கவில்லை! கொந்தளிக்கும் கடலைவிடக் கடுமையாகக் குமுறியது அவர் உள்ளம்.

சிந்தை தெளிந்து சுற்று முற்றும் பார்த்தார். தமது கண்ணீர் தான் பார்வையை மறைத்து விட்டதோ என்ற ஐயத்துடன் கண்களைத் துடைத்துக் கொண்டார். ஆம், இருள் கவியத் தொடங்கி விட்டது. கந்தசாமியும் இருண்ட நெஞ்சத்துடனேயே கடைக்குத் திரும்பி வந்தார். ஆனால், அவரது நினைவு மட்டும் இந்தியாவிலிருக்கும் செல்லத்தையும் குழந்தையையும் பிரிந்து வர மறுத்தது.

ஏக்கத்துடனேயே வாழ்க்கையைத் தொடரலானார் கந்தசாமி. இருப்பு இருந்த பணம் முழுவதும் இந்தியாவுக்குக் கொண்டு போகப்பட்டு விட்டதால், வரவேண்டிய பாக்கிகளை வசூலித்துத்தான் வாழ்வின் தேவைகளை அவர் சரிசெய்து கொள்ள வேண்டியிருந்தது. அதிலும், இன்னொரு தொல்லை. அடகுக்கு வந்த நகைகள் பலவற்றையும் முதலாளி அருணாசலம் எடுத்துச் சென்று விட்டதனால், அவற்றின் சொந்தக்காரர்கள் வந்து நெருக்குதற்கும் அவர் 'ஜவாப்' சொல்ல நேர்ந்தது. இத்தனைக்குமிடையே கொள்ளைக் கூட்டத்தினரின் கொடுமை வேறு அந்த வட்டாரத்தில் அதிகரிக்க ஆரம்பித்து விட்டது! என்ன செய்வதென்று புரியாத நிலையில் திண்டாடித் தவித்துக் கொண்டிருந்தார் கந்தசாமி.

* * *

ஒருநாள் இரவு. அந்த வீதி முழுவதும் ஒரே அட்டகாசம் கிளம்பி விட்டது. அடுத்த எதிர்த்த கட்டடங்களிலே அதிகாரக் கூச்சல்களும், வேதனைக் கூக்குரல்களும் பயங்கரமாக ஒலித்தன. அச்சத்தினால் நடு

நடுங்கிய கந்தசாமி, தமது கடையை நன்முகத் தாளிட்டுக் கொண்டு உள்ளே ஒடுங்கிக் கிடந்தார்.

பின்னும் சிறிது நேரத்தில் 'படார், படார்' என்று மிக அருகிலேயே சப்தம் கிளம்பிற்று. அவ்வாறு தட்டப்படுவது தமது கடையின் கதவுதான் என்பதை அவர் உணர்ந்து கொண்டார். அவரது நா உலர்ந்து விட்டது; கை கால்கள் சோர்ந்து விட்டன. எழுந்து சென்று கதவைத் திறப்பதற்குத் தெம்பு இல்லை. ஆனால், அதற்காக அந்தக் கொள்ளைக் கூட்டம் பின்வாங்கி விடவில்லை. கதவைத் தூள் தூளாக நொறுக்கித் தள்ளி உள்ளே புகுந்து விட்டது!

எந்தகைய கொடுமையைச் செய்வதற்கும் தயாராக வந்திருந்தனர் அவர்கள். இரத்தம் சிந்தச் செய்வதற்கு வேண்டிய சகலவிதமான கொலைக்கருவிகளும் அவர்களிடமிருந்தன. பிண வெறி கொண்ட பேய்களைப் போல் கூச்சலிட்டனர் அவர்கள்.

"என் உயிர் ஒன்றைத் தவிர வேறு என்ன வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள். ஐயோ, என்னை மட்டும் ஒன்றும் செய்யாதீர்கள்!" என்று பரிதாபமாகக் கதறினார் கந்தசாமி.

இவருடைய சரணாகதிக் குரல், அந்தக் கொள்ளைக்காரர்களின் செவிக்கு ஏறவில்லை. கந்தசாமியின் தலையைப் பிடித்து ஆவேசமாக உலுக்கினான் ஒருவன். அவனது மற்றொரு கையிலிருந்த கொடுவாள், கந்தசாமியின் கழுத்தைத் துண்டித்து விடுவது போல் பளபளத்தது. 'எங்கே' என்று கேட்பது போல் கைகளைக் காட்டி ஏதேதோ கேட்டனர் சுற்றி நின்ற கொள்ளையர்கள். அவர்கள் பேசுவது ஒன்றுமே புரியவில்லை.

"ஐயோ, என்னிடம் ஒன்றுமில்லையே!" என்று அலறினார் கந்தசாமி. அதுவும் அந்தக் கொள்ளையர்களுக்குப் புரியத்தான் இல்லை! வந்திருந்த கூட்டத்தார் கொள்ளையடிக்கும் 'கொள்கை'யில் தான் ஒரே விதமானவர்கள்—பேசும் மொழிகளிலோ பல்வேறு வகையானவர்கள். கடல் கடந்த சீமைகளில் பேசப்படும் அத்தனை மொழியாளர்களும் அந்தக் கூட்டத்திலிருந்தனர். ஏன், 'ஒரே தேசம்' என்று கூறப்படும் இந்தியர்களிலும்கூட சிலர் இருக்கத்தான் இருந்தனர். ஆனால், அவர்கள் வேறு மொழிக்காரர்கள்! ஒலி வழியே தமிழனின் உள்ளத்தைத் தொட்டு, அவனது எண்ணத்தை அறிய முடியாத பிற இனத்தவர்கள்! இத்தகைய மகத்தான வேற்றுமையுடன் அவர்கள் இந்தியராயிருந் தென்ன—வேறு தேசத்தினரா யிருந்தால்தான் என்ன? இரண்டும் ஒன்று போலத்தானே!

"பணம் வைத்திருக்கிற இடத்தைச் சொல்லாமல் நம்மை ஏமாற்றப் பார்க்கிறான் இந்த முதலாளி!

வெட்டிக் கொல்லுங்கள் இவனை!" என்று இதே சமயத்தில் சீன மொழியில் கத்தினன் ஒருவன்.

"ஐயையோ! நீங்கள் பேசுவது ஒன்றுமே எனக்குப் புரியவில்லையே. தமிழ் தெரிந்த ஒருவர் கூட இங்கே கிடையாதா?" என்று கந்தசாமி புலம்பினர்.

"என்ன, புரியவில்லையா? நீ சம்பாதித்த பணமெல்லாம் எங்கே வைத்திருக்கின்றாய்; சொல்லி விடு!" என்று இனிய தமிழில் கூறிய வண்ணம் அந்தக் கூட்டத்திற்குள்ளிருந்து ஒருவன் முன்வந்தான்.

தெரியாத மொழிக்காரர்களின் நடுவே சிக்கித் தவித்துக் கொண்டிருந்த கந்தசாமி, திடீரென்று ஒரு தமிழ்க் குரல் ஒலிப்பதைக் கேட்டதும், புத்துயிர் பெற்றவர் போல் தலை நிமிர்ந்தார். நெருக்கடியான அந்த நேரத்தில் தெய்வமே குதித்து வந்து தன்னுடன் பேசுவதாக எண்ணிக் கவலையை மறந்தார்.

தமிழ் பேசியவனையே கந்தசாமியிடம் விசாரிக்கச் சொல்லி விட்டு மற்றக் கொள்ளையர்கள் சற்று விலகினர். அவன் தமிழிலேயே எல்லா விவரங்களையும் கந்தசாமியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான். பிறகு தன் சகாக்களிடம், "இந்த வட்டிக் கடையின் முதலாளி வேறொருவன். அவன் இங்கிருந்த பணத்தையெல்லாம் எடுத்துக் கொண்டு முன்பே இந்தியாவுக்கு ஓடி விட்டான். இந்த ஆள் வெறும் கணக்கு எழுதுகிறவன் தான். நம்மைப் போல் ஏழை—ஆகையால், இவனை சும்மா விட்டு விடுவோம்" என்று அவர்களுடைய மொழியில் கூறினன்.

அடுத்த நிமிஷமே அந்த கொள்ளைக்காரர்களனைவரும் விறுவிறு வென்று வெளியே சென்று விட்டனர். கடை ஏஜண்டு கந்தசாமிக்கு அப்புறம் தான் நல்ல உயிர் வந்தது. "அப்பாடா!" என்று பெரு மூச்சு விட்டார். தன் உடலில் வழிந்து கொண்டிருந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு எழுந்தார். தன் எதிரே தமிழ் பேசிய அந்தக் கள்வன் நின்ற — அவனது பாதங்கள்பட்ட — இடத்தைத் தொட்டு இரு கண்களிலும் ஒற்றிக் கொண்டார்.

"அவன் கொள்ளைக்காரன் தான்; கொடுமையானவன் தான். ஆனலும், அவன் தமிழன்! அவன் மட்டும் இல்லாதிருந்தால், மற்றவர்கள் புரியாத் தனமாகவே வீணுக என்னைக் கொன்று தீர்த்திருப்பார்கள்! என் இனத்தாலுல் தான் என் உயிர் தப்பியது; எனது தாய்மொழியான தமிழால் தான் நான் பிழைத்தேன்......" என்று அவர் உதடுகள் முணுமுணுத்தன.

---

# ‘தங்க வயல் எங்களுடையதே’

(ஞானம்)



கோலார் தங்கவயல், இந்தியாவிலுள்ள மிகப் பெரிய தங்கச் சுரங்கம். அந்தச் சுரங்கத்துக்குள் இறங்கி தங்க மெடுக்கும் தொழிலாள ரெல்லோரும் தமிழரேயாவர். இந்தத் தங்க வயல் பிரதேசம் இன்று மைசூர் (கன்னடர்) ஆட்சியில் இருந்து வருகிறது. ஆனால், தென்னிந்தியா மொழிவழி நாடுகளாகப் பிரிக்கப்படுங்கால், கோலார் தங்க வயல் பிரதேசம் தமிழகத்தோடு சேர்க்கப்பட வேண்டும். இதைக் கன்னடர் ஆட்சேபிப்ப ரென்று நான் கருதவில்லை; ஆட்சேபிக்கவும் நியாயமில்லை.

கோலாரில் தங்கச் சுரங்கம் இருக்கிறது என்பதற்காக அந்தப் பகுதியை நான் கோரவில்லை. அது தமிழகத்தை அடுத்துள்ள பிரதேசம்; அங்கு வாழ்வோரில் தமிழரின் எண்ணிக்கையே அதிகம். இந்தக் காரணங்களை யொட்டித்தான், கோலார் தமிழகத்தின் ஒரு பகுதியென்று கூறுகிறேன். அங்கு தங்கச் சுரங்கம் இருப்பது எனது கோரிக்கையின் அவசியத்தை அதிகப்படுத்துவதாகலாம். ஆனால், அதுவே அடிப்படைக் காரணமல்ல.

தங்க வயல் பிரதேசத்தின் மொழிவாரி மக்கள் தொகை பின்வருமாறு:

| | |
|---|---|
| தமிழர் | **82263** |
| தெலுங்கர் | **26214** |
| கன்னடர் | **7954** |

இதர மொழியினர் மிகமிகச் சிறுபான்மையினர்.

இதிலிருந்து கோலார் பிரதேசம் தமிழகத்தைச் சேர வேண்டியதென்பது தெளிவாகப் புலப்படும். ஆனாலும், கோலார் தமிழகத்தோடு சேருவதற்கு மற்றொரு தடையிருக்கிறது. அது கன்னடரின் ஆட்சேபமல்ல; ஆந்திரரின் ஆதிக்கம். சித்தூர் ஜில்லாவிலுள்ள தமிழ்ப் பிரதேசங்கள் முக்கியமாக கங்குந்தி, பல்லவனேரி ஆகிய இரு பகுதிகள் தமிழகத்தோடு சேர்க்கப்பட்டாலன்றி, கோலார் தங்க வயல் பிரதேசம் தமிழகத்தில் இணைக்கப்படுவது முடியாத காரியம். ஏனெனில் கங்குந்தி—பல்வனேரி பகுதிகள் இப்போதைய தமிழகத்தின் வடகிழக்கு ஜில்லாவாகிய வடஆற்காடு ஜில்லாவிலிருந்து கோலாரைப் பிரித்து நிற்கின்றன. எனவே, சித்தூர் ஜில்லாவின் தமிழ்ப் பகுதிகளை ஆந்திரருக்குப் பறி கொடுத்துவிட்டால், கோலார் மீது நாம் உரிமை கொண்டாடுவது முடியாததாகி விடும்.

கங்குந்தி—பல்லவனேரி ஆகிய தாலூக்காக்கள் உள்பட தென் சித்தூர் முழுவதும் ஆந்திரத் துடனேயே இணைக்கப்படு மென்ற நம்பிக்கையால் ஆந்திரர்கள் கோலார் பிர தேசமும் தங்களுக்கே உரிய தென்று தார் கமிஷனுக்கு மனுச் செய்துள்ளனர்! தங்க வயல் பிர தேசத்தில் தமிழருக்கு அடுத்த படியாக உள்ள பெரும்பான்மை யினர் ஆந்திரரேயன்றி கன்னட ரல்லர். மேலும் கங்குந்தி, பல் லவனேரி, புங்கனூர் ஆகிய சித் தூர் தாலூக்காக்கள் மூன்றும் ஆந்திரத்தோடு சேர்க்கப்பட் டால் கோலார் தங்கவயல் ஆந்திர நாட்டை அடுத்துள்ள பிரதேச மாகவே இருக்கும். ஆகவேதான், ஆந்திரர் அதன்மீது உரிமை கொண்டாடுகின்றனர்.

ஆனால், தமிழரின் நியாயமான கோரிக்கை ஏற்றுக் கொள்ளப் பட்டு திருப்பதிக்குத் தெற்கே யுள்ள சித்தூர் ஜில்லா தாலூக் காக்கள் தமிழகத்தோடு சேர்க் கப்பட்டால் கோலார் தங்க வயல் தமிழருக்காவதை எவரும் தடுத்து நிறுத்த முடியாது. தென்சித்தூர் ஜில்லாவில் வாழும் பெரும்பாலான மக்கள் தெலுங்கு பேசுகிறார்கள் என்று காரணம் காட்டி அந்தப் பிர தேசங்கள் ஆந்திரருக்கே உரிய தென்று வாதாடுகின்றனர் ஆதிக்க வாதிகள். ஆனால், உண்மை விஷயங்கள் அவர்களு டைய பேராசைக்கு எதிரிடை யாக இருக்கின்றன. கங்குந்தி, பல்லவனேரி, புங்கனூர், சந்திர கிரி, காளத்தி ஆகிய ஐந்து தாலூக்காக்களிலும் தெலுங்கு பேசுவோர் அதிகமிருக்கின்றனர் என்பது உண்மையல்ல. அங்கு வாழும் மக்களை மூன்று விதமா கப் பிரிக்கலாம்.

தமிழ் மட்டும் பேசத் தெரிந்தவர்கள்.

தெலுங்கு மட்டும் பேசத் தெரிந்தவர்கள்.

தமிழ், தெலுங்கு ஆகிய இரண்டு மொழிகளும் பேசத் தெரிந்தவர்கள்.

(மற்ற மொழியினரின் எண் ணிக்கை மிகமிகக் குறைவே யாகும்.)

இவற்றில் தெலுங்கு மட்டும் பேசத் தெரிந்த ஆந்திரரின் எண் ணிக்கையைவிட, தமிழ் மட்டும் பேசத் தெரிந்த தமிழரின் எண் ணிக்கையே அதிகமாகும். ஆனால், இதைக் கொண்டு மட்டும் தென் சித்தூர் தமிழருடையதென்று நான் கூறவில்லை; அப்படிக் கூறு வது நியாயமுமல்ல. தமிழ், தெலுங்கு ஆகிய இரண்டும் பேசு வோரின் தொகை, முதல் இரண்டு தரப்பினரைவிட அதிக மாகும். தென்சித்தூரை ஒரு முறை சுற்றிப் பார்த்தால் இந்த உண்மை விளங்கும்.

எனவே, இந்த இரு மொழி யாளர்கள் தெலுங்கும் பேசு கிறார்களென்ற காரணத்தால், தென்சித்தூர் தங்களுடையதே என்று ஆந்திரர் உரிமை கொண்

டாடுவது ஒப்புக்கொள்ளக்கூடிய தல்ல. அப்படியானால், அந்த இரு மொழியாளர்கள் தமிழும் பேசுகிறார்கள் என்ற காரணத்தால் அவர்கள் தமிழரே என்றும் அவர்கள் வாழும் பகுதி தமிழகத்தைச் சேர்ந்ததே என்றும், நாம் கூறினால் நடு நிலைமையாளர்கள் அதை ஆட்சேபிக்க முடியாது. மேற்போக்காகப் பார்த்தால் இது தீர்க்க முடியாத சிக்கலென்றே தோன்றும். அப்படித்தான் தார் கமிஷனும் தனது அறிக்கையில் கூறியிருக்கிறது. ஆனால், இது வேண்டுமென்றே சிருஷ்டிக்கப்பட்ட 'சிக்கல்.' உண்மையில், இதை ஒரு சிக்கலென்றே கொண்டாலுங்கூட தீர்க்க முடியாத சிக்கலல்ல.

மொழியை மட்டும் வைத்துக் கொண்டு இந்தச் சிக்கலைத் தீர்க்க முடியாது. வேறு சில விஷயங்களையும் ஆராயவேண்டும். தென்சித்தூரில் வாழும் இரு மொழியாளர் பண்பாடு, பழக்க வழக்கங்கள், உறவு கொண்டுள்ள பகுதிகள் ஆகியவற்றைக் கொண்டுதான் அவர்கள் எந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதையோ, அல்லது, அவர்கள் வாழும் பிரதேசம் எந்த நாட்டைச் சேர்ந்தது என்பதையோ முடிவு செய்ய வேண்டும்.

தென்சித்தூர் இருமொழியாளர்கள் பேசும் தெலுங்கு, பெஜவாடா ஆந்திரர்களால் புரிந்து கொள்ள முடியாதது. ஆனால், அவர்கள் பேசும் மற்றொரு மொழியாகிய தமிழை வேங்கடம் முதல் குமரிவரையுள்ள எல்லாத் தமிழரும் நன்கு புரிந்து கொள்ளுகின்றனர் அவர்கள் பேசும் தெலுங்கை ஆந்திரர்கள் புரிந்து கொள்ள முடியாததற்குக் காரணம் அது திருத்தமான தெலுங்கல்ல என்பதேயாகும். பெரும்பாலும் தமிழ்ச் சொற்களும், சிறுபான்மை தெலுங்கு சொற்களும் கலந்த ஒரு கதம்ப மொழியையே தென்சித்தூர் இரு மொழியாளர் பேசி வருகின்றனர். விளக்கமாகச் சொன்னால், அந்தக் கதம்ப மொழியில் தெலுங்கு மொழிக்குரிய ஓசையும் உச்சரிப்பும்தான் நம்மை மயக்குகின்றன. சான்றாக, "பெட்டிலோ குட்டை உந்தி; எத்துக் கோனி ரா" என்பது அவர்கள் பேசும் தெலுங்கு (!). இதைத் தமிழ்ப்படுத்தினால், "பெட்டியிலே குட்டை உண்டு. எடுத்துக் கொண்டு வா" என்று ஆகும். இதில் காணப்படும் சொற்கள் அனைத்தும் தமிழ்ச் சொற்களே யொழிய தெலுங்குச் சொற்களல்ல.

தெலுங்கு பேசத் தெரியாத தமிழர் கூட, இந்த கதம்ப மொழியை பேசினால் புரிந்து கொள்ளுகின்றனர். தமிழகத்தின் வடக்கு ஜில்லாக்களிலுள்ள தமிழர்கள் இந்த கதம்ப மொழியைப் பேசவும் ஆற்றல் பெற்றுள்ளனர். ஆகவே, மொழிவழியில் பார்த்தாலும்கூட, தென்சித்தூர் இரு மொழியாளர்கள் தெலுங்கினும், தமிழோடுதான் அதிகமாக தொடர்பு கொண்டு வாழ்கின்றனர். இவர்கள் வாணிபம் செய்வதும் தொழில் நடத்து

வதும் வேலூர், சென்னை முதலிய தமிழ் நகரங்களில்தான். பெண் கொள்ளல், கொடுத்தல் குடும்ப உறவுகளிலும் வேங்கடத்திற்குத் தெற்கேயுள்ள தமிழ் நாட்டுத் தெலுங்கரோடுதான் தொடர்பு கொண்டுள்ளனர். வடக்கேயுள்ள ஆந்திர ஜில்லாக்களில் இந்த இருமொழியாளர்களுக்கு உறவினர்கள் அதிகமில்லை. இதை சித்தூர் சென்று பார்த்ததால்மட்டுமல்ல; அங்குள்ள இருமொழி பேசும் தேசபக்தர்களோடு சிறையிலும் சிறைக்கு வெளியிலும் பழகியதாலும் நன்கு அறிந்தேன்.

பண்பாடு, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைப் பார்த்தாலுங்கூட தென்சித்தூர் இரு மொழியாளர் தமிழ் இனத்தவரின் ஒரு பகுதியினருக்குரிய பண்பாடுகள் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றையே அதிகமாகக் கடைப்பிடிக்கின்றனர்.

குறிப்பாக, மிளகாய்க் காரத்தில் ஆந்திரருக்கு மிகமிக விருப்பமென்பது உலகறிந்த உண்மை. ஆனால், தென்சித்தூர் இரு மொழியாளர்கள் ஆந்திரரின் அதிகாரத்தை ஏற்க மறுப்பது போலவே, அவர்கள் மிக விரும்பியுண்ணும் அதி காரத்திற்கும் அடிமைப்படவில்லை.

சித்தூர் ஜில்லாவின் இயற்கை அமைப்பும் தமிழரின் கோரிக்கைக்கு சாதகமாகவே அமைந்திருக்கிறது. ஆம்; இயற்கையின் சிருஷ்டியான திருப்பதி மலை தென்சித்தூர் பிரதேசத்தை ஆந்திர நாட்டிலிருந்து பிரித்து தமிழகத்தோடு இணைத்து விடுகிறது. ஒரு நாட்டுக்கு எல்லை கோலும்போது இயற்கை அமைப்பைப் புறக்கணிப்பது அறிவுடைமையல்ல; அரசியல் நெறியுமல்ல. கடலும் மலையும் தான் எந்த ஒரு நாட்டிற்கும் இயற்கை எல்லைகளாக இருக்க முடியும். அதிர்ஷ்ட வசமாக தமிழகத்தின் கிழக்கிலும் தெற்கிலும் தென்மேற்கின் சிறு பகுதியிலும் கடல் அரண் செய்து நிற்பது போல, வடக்கேயும் திருப்பதிமலை ஆந்திரத்திலிருந்து தமிழகத்தைப் பிரிக்கும் அரணாக அமைந்துள்ளது.

தமிழினத்தார், தென்சித்தூரை இழந்தால் இயற்கை எல்லையை (திருப்பதியை) இழந்துவிடுவர். இதனால், கோலார் தங்க வயல் பிரதேசமும் தமிழருக்கில்லாது போய் விடும்.

"கம்பன் பிறந்த தமிழ் நாடு" என்று பாடிப் பெருமைப்பட்டால்மட்டும் போதாது. "தங்கம் படைத்த தமிழ் நாடு" என்ற பெருமையும் நமக்குண்டு. இயற்கை தந்த அந்தச் செல்வத்தை நாம் இழந்து விடாமல் பாதுகாக்க வேண்டும்.

"தங்க வயல் எங்களுடையதே" என்ற கோஷம் தமிழகத்தின் வீதி தோறும், தமிழர்களின் வீடு தோறும் முழங்க வேண்டும். எல்லை கோலும் நாள் வரும் போது கோலார் தங்க வயல் பிரதேசத்தின் பாட்டாளி மக்கள், தமிழினத்தாரின் உரிமைக்குத் துணை செய்வார்களென்று நம்புகிறேன்.

# கள்ளச்சந்தை ஒழிப்பு

(துரை—சுந்தரேசன்)

சென்னை சட்ட சபையில், பொது மக்களின் பாராட்டுதலுக்குரிய பல மசோதாக்கள் கொண்டு வரப்பட்டுள்ளன. அப்படிக் கொண்டு வரப்பட்டவற்றில் 'இந்துமத அறநிலையப் பாதுகாப்பு மசோதா' குறிப்பிடத்தக்கதாகும். அத்துடன், தற்போதுள்ள சூழ் நிலையில் உணவு மந்திரி கனம் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் கொண்டு வந்துள்ள 'கள்ள மார்கெட் ஒழிப்பு மசோதா' பெரிதும் வரவேற்கத் தக்கதாகும்.

பண்டித நேரு, ஒரு சமயம் 'கள்ளச் சந்தை நடத்தும் கொள்ளை லாபக்காரர்களை தூக்கு மேடையில் நிறுத்துவேன்' என்று முழக்கம் செய்தார். என்றாலும், கொள்ளை லாபக்காரர்கள் கொழுத்துக் கொண்டேதான் வருகின்றார்கள்.

சென்னை மாகாணத்தைப் பொறுத்தவரை எவ்வளவோ நயமாகவும் பயமாகவும் கேட்டுக் கொண்டும் அந்தக்கோரிக்கையை காற்றிலே பறக்க விட்டு, கள்ள மார்க்கெட் கும்பல் கொள்ளை லாபந் திரட்டி வருகின்றது. 'பிளர்க் மார்க்கெட்' என்பது சர்வ சாதாரணமானதாக—பகிரங்கமாகவே நடத்தக் கூடிய அளவிற்கு வந்து விட்டது. கொள்ளை லாபக்காரர்கள், நாள் பார்த்துச் சொல்லி, ஆள் பார்த்து வியாபாரம் செய்து வரும் அநியாயத்தை அறியாதாரில்லை.

இந்த அக்கிரமத்தை ஒழித்துக் கட்ட பல அதிகாரிகளை நியமித்தும் பயனில்லை. எங்காவது, ஏதாவது இரண்டொரு கள்ளச் சந்தையாளர் பிடிக்கப்பட்டிருப்பினும் என்னபிரமாதம்! 'ஆயிரம் இரண்டாயிரந்தானே அபராதம்? கட்டிவிட்டால் போகிறது! மறுநாள் வியாபாரத்தில் அதை சரிகட்டிக் கொள்ள முடியாதா என்ன?' என்ற போக்கிலேயே அந்த வியாபாரம் பலப்பட்டு வருகின்றது.

இந்த இழிதொழிலில் பழகிப் போன சமூக விரோதிகளான கள்ளச் சந்தைக்காரர்கள் சாதாரண மனிதர்கள் அல்ல; மாய மனிதர்கள்! எத்தனை சட்டங்களைப் போட்டாலும், எத்தனைக் கட்டுப்பாடுகளைக் கொண்டுவந்தாலும், அதில் எதிர் நீச்சல் அடிக்கும் முதலைக் கூட்டங்கள்! இவர்களுக்கு அபராதம் போடுவதால் மட்டும் எந்தப் பயனும் வந்து விடாது. அதனால், அவர்களுக்கு மேலும் மேலும் ஊக்கம் பிறந்து அபராதம் கட்டிய தொகையையும் சேர்த்து, இன்னும் அதிகமாக சம்பாதித்து

விடவேண்டும் என்ற துடி துடிப்பில், சாமர்த்தியமாக— விடாப் பிடியாகக் கொள்ளையடிக் கிறார்கள்.

இவ்வளவு நெஞ்சழுத்த முள்ளவர்களை, ஓரளவிற்காவது அடக்கி யொடுக்க முடியும் எனக் கருதித்தான் இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்க வேண்டும்.

> கள்ள மார்க்கெட் செய்பவருக்கு 1000 ரூபாய் அபராதத்தோடு குறைந்தது 6 மாதம் முதல் 6 வருஷம்வரை சிறைவாசம்.
>
> மூன்று முறை இதே குற்றம் செய்தவர்களின் வியாபார உரிமை ரத்து செய்யப்படுவதோடு, அவர்களை ஊரிலிருந்தே விரட்டலாம்.
>
> தண்டனைக்காளானவர்கள், தாங்கள் செய்த குற்றங்களையும், அடைந்த தண்டனைகளையும் தாங்களே அச்சிட்டுப் பிரசுரிப்பதோடு கடையின் முன்பாக பலகையிலும் எழுதி பலரறிய வைக்க வேண்டும். வியாபார சம்பந்தமான கடிதங்களிலும் அவை அச்சடிக்கப் படவேண்டும்.
>
> இந்தக் குற்றவாளிகளைப் பற்றிய சர்க்கார் அறிக்கைகளை, செய்திப் பத்திரிகைகள் கட்டாயம் பிரசுரிக்க வேண்டும்.

இப்படிப்பட்ட அம்சங்களைக் கொண்ட மசோதாதான் தற்போது கொண்டு வரப்பட்டிருக்கிறது. மூன்று முறை குற்றம் செய்தவர்களுடைய வியாபார உரிமை ரத்து செய்யப்படும் என்ற முடிவு மிகவும் கவனிக்கத் தக்கதாகும்.

கள்ள மார்க்கெட்காரர்கள், சிறைத் தண்டனையைக்கூட பொருட்படுத்த மாட்டார்கள். எனவே, இந்தத் திமிங்கிலங்களை அடக்குவதற்கு, பண்டித நேரு சொன்னதுபோல, தூக்குத் தண்டனை கொடுக்க முடியாவிட்டாலுங்கூட, அவர்கள் வியாபாரத்தைப் பொறுத்த வரையிலாவது, 'தூக்குத் தண்டனை' (விற்பனை உரிமைக்கு சீட்டு) கொடுக்கப்பட வேண்டியதுதான்!

தேசத்திற்கு விரோதமான காரியங்களைச் செய்கிறார்கள் என்ற குற்றங்களைச் சாட்டி, எதிர்க்கட்சிக்காரர்களை, நாடுகடத்துவதும், பாதுகாப்புச் சட்டத்தைக்கொண்டு பாதாளத்தில் தள்ளுவதும் தண்ணீர் பட்டபாடாக இருக்கும் போது, தன்னுடைய சுயநலத்தின் காரணமாகவே, கொள்ளை லாபம் அடிக்கும் கொடுமைகளைச் செய்யும் இந்தக் கள்ள மார்க்கெட் துரோகிகளை, ஊரை விட்டு அப்புறப்படுத்துவதைவிட, நாட்டை விட்டே அப்புறப்படுத்த வேண்டும். அரசியல் வாதிகளுக்கே அத்தகைய தண்டனைகளிருக்கும்போது— இந்த சமூகத் துரோகிகளுக்கு, இதைவிட இன்னும் சற்று கடுமையானதாகவே கொடுக்கப்பட வேண்டும். ஏனெனில், இவர்களுடைய கொடுஞ் செயல்கள்

தான் நாட்டின் அமைதியைக் குலைக்கும் பயங்கரப் புரட்சிக்கு தூபம் போட்டு வருகின்றன.

தவிரவும், குற்றம் செய்து தண்டனை பெற்றவர்கள், தங்கள் தவறுகளை பலகையில் எழுதியும், கடிதங்களில் அச்சிட்டும் வைத்துக் கொள்ள வேண்டும் என்ற முடிவு ஆழ்ந்த கருத்துடன் கூடியதாகும். நினைத்த காரியம் வெற்றிபெற ஓரளவிற்காவது இது உதவி புரியும்!

"இப்படிச் செய்யும்படி சொல்வது நல்லதல்ல! இது அமுலுக்கு வந்தால், இவர்களும் ஒரு குற்ற பரம்பரையினராகி விடுவர். யூதர்களுக்கு வந்த இடையூறுகள் இவர்களுக்கும் வரலாம்! ஆகையால், இந்த மசோதாவை திருத்தியமைக்க வேண்டும்!" என்று சில பத்திரிகைகள் வக்காலத்து வாங்கி யிருக்கின்றன. இந்தப் பத்திரிகைகள், பிற்போக்கு சக்திகளுக்கு எப்போதும் பக்கமேளம் அடிப்பவைதான். மக்களை பஞ்சத்துக்கு இரையாக்கும் பாதகர்களுக்குக் கொடுந் தண்டனை விதிப்பதில் தவறொன்றுமில்லை.

தண்டிக்கப்படும் கள்ளச்சந்தையாளர்களைப் பற்றி, அரசாங்கம் விடும் அறிக்கையை பத்திரிகைகள் பிரசுரித்தே தீர வேண்டுமென்ற விதியை எதிர்த்து, சில பத்திரிகைகள் எழுதியிருக்கின்றன. ஓரவஞ்சகம் செய்வதில் தீரர்கள் எனப் புகழ் பெற்ற நம் நாட்டுப் பிரபல பத்திரிகைகள், செய்திகளை இருட்டடிப்பு செய்வதிலும் கை தேர்ந்தவை. பத்திரிகை தர்மம் சொல்லும் நியாய உணர்ச்சியோடு, இவர்கள், எந்த விஷயத்தையும் வெளியிடுவதில்லையென்றே சொல்லி விடலாம். அதிலும் பெரும் புள்ளிகளின் படுமோசச் செயல்களை அப்படியே இருட்டடிப்பு செய்து வருகிறார்கள். யாராவது ஒரு சாதாரண ஆள், அல்லது தனக்குப் பிடிக்காதவர்கள் அகப்பட்டுக் கொண்டால் மட்டும் கொட்டை எழுத்துக்களில் பிரசுரித்து வருகின்றனர்.

ஒரு பத்திரிகை, "சர்க்கார் இதை சட்டமூலம் செய்யச் சொல்வது சரியல்ல. சௌஜன்யமாக பத்திரிகைக்காரர்களைக் கேட்டுக் கொண்டால், அவர்கள் செய்வார்கள். அதைத் தவிர, சட்ட ரீதியாகக் கொண்டு வரப்பட்டு அமுல் நடத்தப்படும் ஒரு விஷயத்தை பத்திரிகைக்காரர்கள், தாங்களே பிரசுரிப்பார்களாதலால், இதை சட்டமாக்கக் கூடாது" என்று குறிப்பிட்டிருக்கின்றது. அத்துடன் "கொள்ளை லாபக்காரர்களுக்குக் கொடுக்கப் படவிருக்கும் தண்டனைகள் அதிகம். மேலும், தங்கள் குற்றகளைத் தாங்களே விளம்பரப் படுத்திக் கொள்ள வேண்டுமென்பதும் சரியல்ல. போகப் போக அதுவும் ஒரு குற்ற பரம்பரைச் சட்டமாகி விடும்' என்று கூறுகிறது. மற்றும் இந்த மசோதாவை, 'பயங்கர மசோதா', 'அபாய மசோதா'

எனவும் பயமுறுத்துகின்றன வேறு சில பத்திரிகைகள்.

பத்திரிகைகள், முதலாளித்துவத்திற்கு, கச்சை கட்டிக் கொண்டு கை வரிசையை காட்டத் துணிவது இதுதான் முதல் தடவையல்ல. பத்திரிகை யுலகம் தான் முதலாளிகளின் சொத்தாகி விட்டதே! இந்த பத்திரிகைகள் கூறுவதுபோல, 'சௌஜன்யமாக' கேட்டுக்கொண்டாலே எல்லா பத்திரிகைகளும் பிரசுரித்துவிடும் என்றால், சட்டத்தை பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லையே!

இதைத் தவிர, தமக்கு வேண்டியவர்கள், உறவினர்கள், ஏன்—தம் குடும்பத்தினர்களே கள்ள மார்க்கெட் செய்து அகப்பட்டுக் கொண்டால்—அதைத் தம் பத்திரிகையில், 'சௌஜன்ய'மாக எந்த ஆசிரியர் வெளியிடத் துணிவார்? தன் பத்திரிகையோடு மட்டுமா? எல்லாப் பத்திரிகைகளிலுமே இல்லாது தன் செல்வாக்கைக் கொண்டு, இருட்டடிப்பு செய்துவிட மாட்டாரா?

ஆதலின், மசோதாவின் உயிர் நிறைந்த இந்த விதியை அப்படியே நிறைவேற்ற வேண்டும். அப்பொழுதுதான் உண்மை விவரங்கள் பத்திரிகைகளில் வெளி வரும்.

இடதுசாரிகளின் எழுச்சியைக் கண்டு அவர்கள் புரட்சிக்கு வித்திடுகிறார்கள் என்று ஓலமிடும் இந்த முதலாளி ஸ்தாபனங்களின் பத்திரிகைகள், முற்போக்கான எந்தத் திட்டங்களையும் முறியடிக்கவேண்டும் என்றநோக்கத்திலேயே போய்க்கொண்டிருக்கின்றன. இடதுசாரிகளை அடக்கியொடுக்கப் பாடுபடுவதுபோல முதலாளிகளின் கொள்ளை லாப வேட்டையை,சிறிதாவதுகுறைத்துக் கொள்ளும் அளவிற்கு எதுவும் செய்வதில்லை. ஏனெனில், முதலாளிகளின் எண்ணத்தை நிறைவேற்றத்தானே இந்தப் பத்திரிகைகள் அவதாரம் எடுத்துள்ளன!

எந்த சட்டத்தையும் எதிர்த்து—ஏமாற்றிக் கொள்ளையடிக்கும் சக்தி படைத்தவர்கள் கள்ள மார்க்கெட்காரர்கள்! ஆகவே, அவர்களைக் கண்டுபிடித்து, அம்பலத்திற்குக் கொண்டுவர உதவி புரியவேண்டியது பொதுமக்கள் கடமை.

தொழில்களை தேசிய மயமாக்கும் வரை,—அரசாங்கக் கூட்டுறவு நிலையங்கள்தான் பொருள்களை பகிர்ந்து கொடுக்க வேண்டும் என்ற நிலைமை ஏற்படும் வரை—கள்ள மார்க்கெட்காரர்கள் கொண்டாட்டம் போட்டுத் தான் வருவார்கள். என்றாலும், அந்தக் கொடுமையை ஓரளவிற்காவது குறைத்து, எதிர்காலத்தில் தொழில்களை தேசிய மயமாக்கி, கூட்டுறவுப் பண்ணைகள், ஸ்தாபனங்கள் வளர்ச்சியடைய இந்த மசோதா ஒரு விடிவெள்ளியாகத்தான் முளைத்திருக்கிறது. இதை நிறைவேற்றுவதன் மூலம் சென்னை சர்க்கார் நாட்டு மக்களுக்கு நன்மை செய்வார்கள் என்றே நம்புகின்றேன்.

---

# வழியெல்லாம் விருந்து

(டாக்டர் மு. வரதராசனார்)



சென்னையிலிருந்து திருநெல்வேலிக்குச் செல்லலாம். திருநெல்வேலியிலிருந்து சென்னைக்கு வரலாம். தமிழ் நாட்டின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு முனைக்குச் செல்லலாம்; எளிதில் செல்லலாம்; கட்டுச் சோறோ அரிசி முதலிய உணவுப் பொருளோ கையில் எடுத்துக் கொள்ளாமல் செல்லலாம். புகை வண்டியில் இடம் பெறுவதற்காகப் பணம் வேண்டும்; பசித்தபோது சிற்றுண்டியோ உணவோ தான் இருக்குமிடம் நாடி வரச் செய்வதற்குப் பணம் வேண்டும். இவ்வாறு பணம் செலவு செய்யக்கூடிய நிலை இருந்தால், கால் நோகாமல் கை நோகாமல் நெடுந்தொலைவு போய் வர முடிகின்றது. இதைவிட விரைவாக வானத்தின் வழியாகப் போய் வரும் வாய்ப்பும் ஏற்பட்டிருக்கின்றது.

கையில் பணம் இல்லாத ஒருவர் நெடுந்தொலைவில் உள்ள ஊருக்குப் போய்வர முயல்வதாக வைத்துக் கொள்வோம். அவர் இன்று படவேண்டிய இடர்கள் எவ்வளவு! மானம் உடையவர் புகை வண்டியில் மறைந்தும் ஒளிந்தும் பயணம் செய்ய முடியாது; ஆகையால், அவர் நெடுந்தூரம் நடந்தே களைத்துப் போக வேண்டும். மணிக்கணக்கில் முடிக்கும் பயணத்தை, நாட்கணக்காக வாரக் கணக்காக முயன்று நடந்து சோர்வுற வேண்டும். பெரிய சாலைகளில், நகரங்கள் அமைந்திருக்கும் வழிகளில் நடந்து சென்றால், அந்நகரங்களின் உணவு விடுதிகளில் உணவு கொள்வதற்குப் பணம் இல்லாமல் திகைக்க வேண்டும்; பணம் இல்லாதவர்க்கு நகர வாழ்க்கையில் இடமில்லை யாகையால் அப்பகுதியில் எட்டிப் பார்க்கவும் மனம் இல்லாமல், கிராமங்கள் இருக்கும் வழிகளையே நாடிச் செல்ல வேண்டும். நகரப் பகுதிகளில் ஒருவரும் ஏறுமல் செல்லும் வண்டிகளிலும் பணம் இல்லாதவர்க்கு இடம் கிடைக்காது. ஆனால்கிராமவழிகளில் இரட்டை மாட்டு வண்டிகள் போகுமானால், நடந்து களைத்தவர்க்குப் பணம் இல்லாமலே இடம் கிடைக்கும். 'வழியே போகும் வண்டிதானே! பேச்சுத் துணையாக இருக்கட்டும்' என்று வண்டிக்காரர்கள் இடந்தருவார்கள். இடம் படைத்துச் செல்வது ஒரு புறம் இருக்க; கிராமங்களில் இன்

னும் 'பகுத்துண்டு வாழும் பண்பாடு' ஓரளவில் இருக்கின்றது என்றே கூறவேண்டும்.

நகரங்களில் பசித்தவன் விடும் கண்ணீரைப் பார்த்துக் கொண்டும் பட்டினியால் அழுங் கூக்குரலைக் கேட்டுக் கொண்டும் அங்கங்கே விருந்துகளும் களியாட்டங்களும் நடைபெற்றுக் கொண்டே இருக்கும். பக்கத்து வீட்டுப் பட்டினியைப் பற்றியோ எதிர் வீட்டு வறுமையைப் பற்றியோ நகர மக்கள் கவலைப்படுவதே இல்லை; கவலைப்படுவதால் பயனும் இல்லை; கவலைப்படவும் முடியாது. யந்திரத்தின் பல உறுப்புக்கள் போல் அவரவர்கள் தம் தம் கடமைகளைச் செய்து கொண்டு இரக்கமில்லாமல் வாழ்ந்தால்தான் வாழமுடியும். ஆகையால் நகரங்களில் பணமில்லாதவர்க்குப் பசி தீரும் வழியே இல்லை. கிராமங்களில் இத்தகைய இரக்கமற்ற அமைப்பு இன்னும் நிலைபெறவில்லை. கிராமங்களும் ஓரளவு மாறி வருகின்றன என்று சொல்லலாம். முழுதும் மாறி இரக்கத்தைக் கொல்வதற்கு இன்னும் நெடுங்காலம் ஆகும். ஆகையால் இன்றும் பசித்தவனுக்குப் பகுத்தளித்து உண்ணும் வழக்கத்தை அங்கே காணலாம்.

நகரங்களில் உணவு விடுதிகள் மலிந்திருப்பது போல் கிராமங்களில் இல்லை. பெருஞ்செல்வனும் கிராமத்திற்குச் சென்றால், எந்த வீட்டாரையாவது நாடி அவர்களுடைய விருந்தினனாகச் சென்றால்தான் முடியும். ஆகையால், உணவு விடுதிகள் இல்லாத பழங்காலத்தில், தமிழ் நாட்டில் வீடு தோறும் விருந்தோம்புதல் சிறந்த அறமாகப் போற்றப்பட்டு வந்தது. இன்றும் இராக்காலத்தில் ஊருக்குப் புதியவனாய் ஒருவன் ஒரு கிராமத்திற்குச் சென்றால், அவன் பசித்திருக்கின்றான் என்பதை ஒருவர் உணர்ந்தால் போதும்; அவரே இங்கும் அங்குமாகச் சென்று, அவருடைய பசிக்கு உணவு தேடித் தருவதை முதல் கடமையாகக் கொள்வார்; நான்கைந்து வீட்டினர் சேர்ந்தாவது எவ்வாறேனும் பசி தீர்க்க முற்படுவார்கள். ஆகையால், மானத்திலும் அறத்திலும் நம்பிக்கை உடையவராய், பிச்சை எடுப்பதிலும் திருடு முதலியவற்றிலும் நாட்டமில்லாதவராய் உள்ளவர் பணம் இல்லாமல் நெடுந்தொலைவு செல்ல வேண்டுமானால், கிராமங்களின் வழியாகச் செல்வத்தைத் தவிர, வேறு வழியே இல்லை.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன், புகைவண்டித் தொடர்பும் உணவு விடுதிகளும் இல்லாத காலத்தில் தமிழ் நாட்டின் ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்குச் செல்வதாக இருந்திருந்தால், எவ்வளவு இடர்ப்பாடு இருந்திருக்கும்! செல்வராக இருந்தவர்கள், தேர்களில் சென்றுவரும் வாய்ப்பைப் பெற்றிருப்பார்கள்; வேண்டிய உணவுப் பொருள்களைத் தேர்களில் கொண்டு சென்றிருப்பார்கள்; அவையும் போதாத காலத்தில்

விருந்தோம்பும் தமிழ்நாடு அவர்களைக் கவலையின்றிக் காத்திருக்கும். ஆனால், செல்வரல்லாத மற்றவர் எவ்வாறு போய்வர முடிந்திருக்கும்? காலால் நடந்து நடந்து களைத்துச் சலித்துப் போய் வருவதே வறியவர்களின் நிலையாக இருந்திருக்கும். சென்று தங்கும் ஊர்களில் அந்த அந்த ஊரார் தரும் உணவையே நம்பி உயிர்வாழும் நிலைமை இருந்திருக்கும்.

ஏதேனும் கைத்தொழில் செய்து உயிர்வாழும் மக்களுக்கு இவ்வாறு நெடுந்தொலைவு போய் வரும் தொல்லை இருந்திருக்காது. ஆனால் பிறர்க்கு ஆடல் பாடலாகிய கலை விருந்தை அளித்துப் பிறருடைய உழைப்பாலாகிய உணவு முதலியவற்றைப் பெற்று வாழும் கூட்டத்தார்க்கு இந்தத் தொல்லை இருந்திருக்கும். கலைஞர் பறவைக் கூட்டம் போன்றவர். இயற்கை வளமுள்ள இடத்தை நாடிச் செல்லும் பறவைகளைப் போலவே, கலைஞரும் கொடை வளமுள்ள கலைஞரை நாடிச் செல்வது வழக்கம். பொருள் பெற்ற காலத்தில் அதைச் சேர்த்து வைக்கும் தன்மை பறவைகளிடமும் இல்லை; கலைஞர்களிடமும் இல்லை. ஆகையால் கலைஞர்க்கு உள்ளூரார் எவ்வளவு உதவி செய்த போதிலும், போதாக்குறை இருந்தே வந்தது. நாட்டில் மழை வளம் குறைந்த காலத்தில், உள்ளூராரைப் பசி வாட்டும் காலத்தில், கலைஞரின் இன்ப வாழ்க்கைக்கு இடமே இல்லை; பசி அவர்களை மிகுதியாக வாட்டும். அத்தகைய நெருக்கடியான காலங்களில், கலைஞர் தம் ஆடல் பாடலையும் மறந்து உணவை நாடி வெளியூர்களுக்குச் சென்று வருந்த நேரும்.

பழந்தமிழ் நாட்டு ஆடல் பாடல் கலைகளில் வல்லவர் யாணர் கூத்தர் விறலியர் பொருநர் என்று பாகுபாடு செய்து கூறப்படுவர். அவர்கள் இவ்வாறு வறுமையின் நெருக்கடிக்கு ஆளாகி வருந்திய வருத்தமும், வெளியூர்களுக்குச் சென்று உணவு தேடி அலைந்த அலைவும், கொடைவளமுள்ள வள்ளல்களை நாடி நெடுந்தொலைவு நடந்து சென்ற துன்பமும் பழந்தமிழ் இலக்கியத்தால் அறியப்படுகின்றன. பழந்தமிழ் இலக்கியத்தில் ஆற்றுப்படை என அமைந்துள்ள பகுதிகள் கலைஞரின் இத்தகைய வாழ்க்கையை எடுத்துக் கூறுகின்றன.

இவர்கள் வறுமையில் நொந்து ஊர் ஊராக அலைந்து செல்லும் போதும், வழியில் உள்ள ஊர்களில் பசி தீர உணவு பெற்று உயிர்வாழும் வாய்ப்பு இருந்தது. ஊர்தோறும் முன்பின் அறியாத வீடுகளில் உணவு உண்டு நடந்து சென்று வள்ளல் ஒருவனை அடைந்த பின்பே, அவர்களுடைய வறுமைத்துன்பம் தொலையும். அவ்வாறு வறுமை தீர்ந்து மகிழ்ந்து திரும்பும் கலைஞர் வரும் வழியில் தம்போல் கலைஞர் எவரேனும் வாடியிருக்கக்

கண்டால், அவரை அன்போடு கண்டு பேசி, "வருந்த வேண்டா; சோர்வுற வேண்டா; இன்ன வள்ளலை நாடினால் வறுமை தீரும். அதற்குரிய வழி இது" என்று வழிகாட்டுவர். இவ்வாறு வழி காட்டி அனுப்புவதனால்தான் இந்த இலக்கியப் பகுதிக்கு ஆற்றுப்படை என்று பெயர் அமைந்தது. (ஆறு—வழி. ஆற்றுப் படை—வழிப்படுத்துதல்).

இப்படி வழிகாட்டும்போது, வறுமை தீர்ந்த கலைஞர், எந்த எந்த ஊர் வழியாகச் செல்ல வேண்டும் என்பதைத் தெளிவாகக் கூறி, அந்த அந்த ஊர் மக்கள் வரவேற்று அன்போடு உணவு அளிக்கும் முறையையும் கூறுவர். அந்த ஊர்களின் வழியாகத் தாம் முன் சென்று வந்த காரணத்தால், தம் அனுபவத்தையே கூறுவதாகக் கொள்ள வேண்டும். அந்தப் பகுதிகளைக் கற்கும்போது பழந்தமிழ் நாட்டில் வறுமை மிகுந்த காலங்களிலும் ஊர்தோறும் வீடுதோறும் விருந்தோம்பும் அறம் குன்றாமல் இருந்ததென அறியலாம்; தம் வீட்டில் தமக்குக் கிடைத்தது ஏதுவோ, அதை வழிப்போக்கராகிய கலைஞர்க்குக் கொடுத்து உதவி அவருடைய பசியைத் தீர்த்து மகிழ்ந்த மகிழ்ச்சியைக் காணலாம்.

நல்லியக் கோடன் என்னும் வள்ளலிடம் போய் வறுமை தீரப் பரிசில் பெற்றுவந்த பாணன் ஒருவன் மற்றொரு பாணனுக்கு வழிகாட்டுவதாக அமைந்தது சிறுபாணாற்றுப் படை என்பது. அதில் வறுமை தீர்ந்த பாணன் ஆமூரில் உழவர் விருந்தோம்பும் முறையைக் குறிப்பிடுகின்றான். உழவர்குடும்பத்தில் கைக்குற்றல் அரிசியாலான சோறும் நண்டும் பீர்க்கங்காயும் கலந்த கூட்டும் கிடைக்குமாம். கிடைக்கக்கூடிய உணவின் சிறப்புப் பெரிது அல்ல; விருந்தோம்பும் முறையே போற்றத் தக்கது. வீட்டுத்தலைவி பாணனை வரவேற்று உணவு நல்கிய பின், பாணன் விடைபெற முயல்வான் அல்லவா? அப்போது, தான் கூறினாலும் எளிதில் தடுக்க முடியாது என்று, "இருங்கள், போக வேண்டாம்" என தன் மக்களைக் கொண்டு தடுக்க முயல்வாளாம்.

ஆமூர் எய்தின்
உான்கெழு நோன்பகட்டு
உழவர் தங்கை
தொடிக்கை மகடூஉ மகமுறை
தடுப்ப
இருங்காழ் உலக்கை
இரும்புமுகம் தேய்த்த
அவைப்புமாண் அரிசி
அமலைவெண் சோறு
கவைத்தாள் அலவன்
கலவையொடு பெறுகுவிர்.
(சிறுபாணாற்றுப்படை, 188-195)

வறுமையால் வாடிச் செல்லும் வழிப்போக்கராகிய கலைஞர்க்கு முன்பின் அறியாத குடும்பங்களில் இவ்வாறு வரவேற்பு, விருந்து, வேண்டுகோள் எல்லாம் நடைபெறும் நிலைமை நினைக்க வியப்பாகவே உள்ளது!

---

கு

# மதிப்புரை

## தலைவர் காமராஜ்

(வெளியீடு: சதானந்தா புத்தக நிலையம், விருது நகர். 166 பக்கங்கள். ரூ 2–8–0)

த. நா. கா. க. தலைவராயிருக்கும் திரு. காமராஜரைப் பற்றி பல பிரமுகர்கள், பத்திரிகாசிரியர்கள் முதலியோர் எழுதிய பாராட்டுரைகளும், திரு. ரா. க. சண்முகம் அவர்கள் வரைந்துள்ள முன்னுரையும் அடங்கிய தொகுப்பு நூல் இது. அநேகமாக எல்லாக் கட்டுரைகளும் திரு. காமராஜரைப் புகழ்வதாக இருக்கின்றனவே தவிர, அவரிடம் உள்ள திறமை, அவர் சாதித்துள்ள அரும் பெரும் காரியம், நாட்டிற்கு அவரால் நேரடியாக ஏற்பட்டு வரும் நன்மை என்ன என்பதைக் கூறுவதாக இல்லை! மேலும் 'ஒருவரைப் புகழும் நூலில், வேறு சிலரை இகழும் கருத்துக்களும் இருப்பது முறையல்ல' என்ற நல்லிலக்கணத்திற்கு முரண்பட்ட சில கட்டுரைகளும் இதில் காணப்படுகின்றன. ஆயினும், 35 பேர்களின் கருத்துரைகள் அடங்கிய இந்நூலில், அம்மாதிரி பிறரை இகழும் கருத்துரைகள் மூன்று நான்கு மட்டுமே இருக்கின்றனவென்பது ஓரளவு புறக்கணித்தற்குரியதே. நல்ல முயற்சி இது.

* * *

## மாதக் கடிதம்

(கழக, பொருளாதார ஆராய்ச்சி இலாகா வெளியீடு, தேனும் பேட்டை காங்கிரஸ் மைதானம், சென்னை—தனிப் பிரதி 4 அணா.)

இந்த மாதக் கடிதத்தில் விவசாய வருமானவரி பற்றி ஆராய்ந்து விவாதிப்பதற்கான ஒரு கட்டுரையும், தென் கொரியாவில், குத்தகைக்காரர்கள் நிலத்திற்கு சொந்தக்காரர்களான விதமும் வெளியிடப்பட்டுள்ளன. இதில், "நிர்மாண சிந்தனை" என்பதற்குப் பதிலாக "நிர்வாண சிந்தனை" என்றும், "பொறுத்தவரையில்" என்பதற்கு "பொருத்தவரையில்" என்றும் பிழைகள் காணப்படுகின்றன. இனி வரும் பிரசுரங்களிலேனும் இத்தகைய பிழைகள் தவிர்க்கப்படுமாக!

* * *

## இலட்சிய வரலாறு

(ஆசிரியர்: சி. என். அண்ணாத்துரை. வெளியீடு: திராவிடப் பண்ணை, திருச்சி. விலை ரூ 1.)

பூரண சுதந்தரத்திற்குப் போராடிய காங்கிரஸிற்கு ஆதியில் நேர் எதிரிடையாக விளங்கிய ஜஸ்டிஸ் கட்சியிலிருந்து, பின் 'தமிழ் நாடு தமிழருக்கே' என்று 'பரணி' பாடி, பிறகு மாறிக் கொண்டே வந்து, இப்போது திராவிட நாடு தனியரசு கோரும் கொள்கைக்கு வந்திருப்பது வரையில், இடைப்பட்ட கொள்கை மாற்றங்களையெல்லாம் தொகுத்துக் கூறி அவற்றிற்குத் தகுந்த காரணங்கள் காட்டவும் முயன்றிருக்கிறார் இந்நூலாசிரியர். 'ஒரே புறக் கண்ணோட்ட'முள்ள கருத்துக்கள்—ஆராய்ச்சிக்குப் பொருந்தாத ஆதாரங்கள்.

* * *

## கலைவாணி (கையெழுத்துப்பிரதி)

(ஆசிரியர்கள்: ராம், ஜெயராம், கா ரா., அலுவலகம்: காரைக்குடி)

கட்டுரைகளில் காணப்படும் கருத்துக்கள் மிகமிக உயர்ந்தவை. எழுதும் ஆற்றல் ஒவ்வொரு கட்டுரை

## மின்சாரத்தால் தூக்கம்!

சத்திர சிகிச்சை செய்வதற்கு முன் நோயாளிகளுக்கு 'குளோரோபாம்' அல்லது 'கொக்கோயின்' போன்ற மயக்க மருந்து கொடுப்பதற்குப் பதிலாக, மின்சார சக்தியின் மூலம் செயற்கையாக தூக்கம் ஏற்படச் செய்வதற்கான முறையை பிரிட்டிஷ் விஞ்ஞானிகள் கண்டு பிடித்திருக்கின்றனர். பிரிஸ்ட்லிலுள்ள நிபுணர்கள் இம்முறையை விலங்குகள்மீது வெற்றிகரமாக பரிட்சை செய்திருக்கின்றனர்.

இம்முறையைப்பற்றி ஆராய்ந்து வரும் குழுவின் தலைவரான டாக்டர் வால்டர் இப்புது முறையை தன் உடம்பிலேயே வெற்றிகரமாக பரிட்சை செய்துள்ளார். அதன்பின் அவர் ஒரு பேட்டியில் கூறியதாவது: "மின்சார விசைகள் என்மீது தாக்கியவுடன் நான் கும்பகர்ணன் போல் ஒரேயடியாக தூங்கிவிடவில்லை. என் உடம்பைக் கிள்ளிய பொழுதும், ஊசியால் குத்திய பொழுதும் எனக்குக் கொஞ்சங்கூட வலியே இருக்கவில்லை. ஒரு நபர் தூங்க வேண்டுமென்று நினைத்தால் உடனே மூளை ஒருவித மின்சார விசைகளை உற்பத்தி செய்கிறது. அதேவித விசைகளை செயற்கையாக சிருஷ்டிக்கத்தான் நாங்கள் முயன்று கொண்டிருக்கின்றோம்".

இம்முறையைக் கையாள்வதிலுள்ள பெரிய நன்மை என்னவெனில், ஆபரேஷன் முடிந்தவுடன் நோயாளியை உடனடியாக எழுப்பிவிடலாம். இதற்கு மின்சார விசை உற்பத்தி செய்யும் சாதனத்திலுள்ள 'ஸ்விட்சை' சர்ஜன் நிறுத்த வேண்டிய ஒரு வேலைதான். மயக்க மருந்துகளால் சில நோயாளிகளுக்கு ஏற்படும் குமட்டல் முதலியவை இம்முறையில் சிறியதேனும் காணப்படுவதில்லை. சிறிய ஆபரேஷன்கள் முதலியவற்றிற்கு இம் மின்சார தூக்க முறையை அபாயமின்றி கையாள முடியும்.

---

யிலும் மிளிர்கின்றது. பிறர் கருத்தைத் தாக்கும் கட்டுரைகளிலும், தமிழின் தரம் குறையவில்லை. சித்திரங்களை, அவற்றை எழுதியவர்களின் இளம் பருவம், சூழ்நிலை ஆகியவற்றை சேர்த்துப் பார்க்கும்போது உயர்ந்தவை யென்றே கூறலாம். வளர்ச்சிக்கான நம்பிக்கை எழுதியவர்களின் கைத்திறத்தில் காணப்படுகிறது. 'கலைவாணி'க்கு இளஞ்சிறார் செய்யும் தொண்டு சிறப்புறுக!

* * *

### அன்னம் (மாதம் இருமுறை)

(ஆசிரியர்: ம. சோ. கண்ணபிரான். அலுவலகம்: 1/343—தங்கசாலை, சென்னை–1. பிரதி 1அணா.)

சிறுவர்களுக்குரிய இந்தப் பத்திரிகையில் சின்னஞ் சிறு கதைகளும், இனிய கவிதைகளும் அடங்கியுள்ளன.

—மணி

# தேசியவாதிகளும் சாதிக் கூச்சலும்

"தேசியவாதி"



இந்தியா சாதி, மத வேற்றுமைகள் நிறைந்த உபகண்டம். தமிழகமும் இதற்கு விதிவிலக்கல்ல. பண்டைத் தமிழகத்தில் சாதி சமய வேற்றுமைகள் இருந்து வந்ததாக நமது இலக்கியங்கள் தெரிவிக்கவில்லை. தொழில்வாரி பிரிவுகள் இருந்து வந்தன என்றாலும், அவை பிறப்புவழியாக இயங்கவில்லை. பண்டைநிலை எதுவாயினும், இன்றுள்ள சாதி வேற்றுமைகள் தொலைந்தாக வேண்டுமென்ற எண்ணம் எங்கும் பரவி வருகிறது.

தேசியவாதிகள் அரசாங்கத்தை ஏற்ற பிறகு அவர்களை எதிர்நோக்கி நிற்கும் தொல்லையான பிரச்னைகளில் வகுப்புவாரி உத்தியோகப் பிரச்னையும் ஒன்றாகும். பிரிட்டிஷ் இந்தியாவில் ஜஸ்டிஸ் கட்சி ஆட்சி புரிந்தபோது அரசாங்க உத்தியோகங்களை வழங்குவதற்காக, இந்துமக்கள் பிராமணர், பிராமணரல்லாதார், தாழ்த்தப்பட்டவர் என மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டனர்.

இந்தப் பிரிவுக்குக் காரணமென்ன? சமூக ஏற்றத் தாழ்வேயாகும். பிராமண சாதியாரைவிட, பிராமணரல்லாத சாதியினர் கல்வி பொருளாதாரத்துறைகளில் ஒடுக்கப்பட்டு வருந்துகின்றனர். எனவே, இந்த ஏற்றத் தாழ்வுகளை நீக்கி சமூக மக்களை சம நிலைக்குக் கொண்டுவர ஒரு சமதர்மத்திட்டம் அவசியமாகின்றது. அந்தத் திட்டம் வகுக்கப்படும்வரை அல்லது அதை வகுத்து அமுல் நடத்தும் அரசாங்கம் அமையும்வரை இன்றுள்ள வகுப்புவாரி நியமன உத்தரவை ரத்து செய்வது நீதியல்ல. சாதி அடிப்படையில் உத்தியோகங்களை வழங்குவதை உண்மை தேசியவாதி எவனும் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொள்ளமாட்டான். ஆனால், சந்தர்ப்பவசத்தால் முன்னேறிவிட்ட ஒரு சாதியினர், பின்தங்கி நிற்கும் சாதியினரின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையிடும்வரை சட்டத்தின் மூலம் நீதி வழங்குதல் அவசியமாகிறது.

பிராமண சாதியினர், பிற சாதியினரைவிட எல்லாவகையிலும் முன்னேறியுள்ளனர். இந்த முன்னேற்றம் பிற சாதியினரின் உரி

மையை ஆக்கிரமிக்கும் அளவுக்கு இருக்கிறதென்பதே பிராமண ரல்லாத சாதியினரின் குற்றச்சாட்டு.

பிராமண சாதியினர் இன்று அடைந்துள்ள சிறப்புகளுக்கெல்லாம் அவர்களது அறிவும் ஆற்றலும்தான் காரணமென்கின்றனர் சில வகுப்புவாதப் பிராமணர்கள். அறிவு ஆற்றல்களில் பிராமண ரல்லாத சாதியினர் பின்தங்கி நிற்கக் காரணமென்ன? பிராமண ரல்லாதாரின் பிறவிக் குற்றமல்ல; மதவாதிகள் செய்த சதியேயாகும். சமூகத்தை சாதிவாரியாகப் பிரித்தவர்கள், சாதிக்கொரு நீதி வகுத்தார்கள். இழிதொழில்கள்—உடலுழைப்புத் தொழில்—எத்தனையுண்டோ அத்தனையையும் பிராமண ரல்லாதார் தலையில் சுமத்தினர். உடலுழைப்பல்லாத அறிவுத்தொழில்களை பிராமணர்களுக்கே உரிமையாக்கினர். இதன் விளைவாகத்தான் பிராமண ரல்லாதார் அறிவுத்துறையில் பின்னடைய நேர்ந்தது.

வகுப்புவாரி உத்தரவை அமுல் நடத்துவதன் மூலம் சமத்துவத்தை நிலை நாட்ட முடியுமா? வகுப்புவாரி நியமனம், வேற்றுமைகளை ஒழிப்பதற்குப் பதில் அவற்றை அங்கீகரித்து விடுகிற தல்லவா? என்று கேட்கலாம். இது உண்மைதான். ஆனால், சமுதாய முழுவதையும் ஏககாலத்தில் உயர்த்தக்கூடிய ஒரு சோஷியலிசத் திட்டம் உருவாகும் வரையில் சாதிவேற்றுமையை அங்கீகரிப்பதன் மூலம் தான் ஒடுக்கப்பட்ட மக்களை உயர்த்த முடியும்.

வீரச் சிதம்பரனார் வகுப்புவாதியல்ல; வகுப்புவாதத்தை துணையாகக்கொண்டு ஏகாதிபத்தியத்திற்கு உதவிபுரிந்த ஜஸ்டிஸ் கட்சியை தமது வாழ் நாள் முழுவதும் எதிர்த்தவர். பாரதியார், சுப்ரமண்ய சிவா போன்ற பிராமண தேசபக்தர்களைத் தமது ஆருயிர் நண்பர்களாகக் கொண்டவர். அப்படிப்பட்ட ஒரு பெரியார் வகுப்புவாரி நியமன உத்தரவை ஆதரித்தார் என்பதை இங்கு நினைவுறுத்த வேண்டும் ஆம்; சிதம்பரனாரின் கருத்து வழிதான் இன்றைய தேசீய ஆட்சி வகுப்புகளுக்கு நீதி வழங்குகிறது. வகுப்புவாரி உத்தரவென்பது தவிர்க்கமுடியாத தீமைதான். ஆனாலும், ஒரு சிறுபான்மை சாதியார் பெரும்பான்மை மக்களின் உரிமைகளைக் கட்டுப்பாடாகக் கவருவதைப் போன்ற கொடுமையானதல்ல.

பிராமணர்—பிராமணரல்லாதார் பிரச்னை தமிழ் இனத்தவருக்குள்ளேயே ஏற்பட்ட சாதிப்பூசலாகும். இது தமிழினத்தாருக்கும் வேற்றினத்தாருக்குமுள்ள சச்சரவு அல்ல. மேலும், இது எந்தக் காலத்திற்கும் தீர்க்கமுடியாத சண்டையுமல்ல. நேரவிருக்கும் பொருளாதாரப் புரட்சி இந்த சாதிச்சண்டைகளை சுட்டுப் பொசுக்கி

சாம்பராக்கிவிடும். தொழில்களையெல்லாம் தேசிய மயமாக்கி உழைப்புக்கும்—தேவைக்கும், ஏற்ற ஊதியம் ஏற்படுகின்ற காலத்தில் உத்தியோகத் துறையில் வகுப்பு வேற்றுமை வாழமுடியாது.

பிராமண நண்பர்கள் ஒன்றைக் கவனத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். வகுப்புவாரி உத்தரவை ஏற்படுத்தியவர்கள் எந்தக் கண்ணோட்டத்துடன் அதை ஏற்படுத்தியிருந்தாலும், இன்றைய தேசிய அரசாங்கம் அதற்குப் பொறுப்பாளியல்ல. வகுப்புவாரி உத்தரவை என்போன்ற தேசியவாதிகள் வரவேற்கக் காரணம், அது பிராமண சாதியாருக்கு எதிரிடையானது என்பதற்காகவல்ல. பின் தங்கி நிற்கும் சாதியினர் முன்னேறத் துணைபுரிகிறதென்பதனாலேயாகும்.

இந்த உத்தரவால், பிராமண சாதியினர் நெடுங்காலமாக அடைந்துவந்த உத்தியோகப் பதவிகளின் எண்ணிக்கை சிறிது குறையலாம். இதைத் தவிர்க்கமுடியாது. பள்ளத்தை உயர்த்தவேண்டுமென்றால், மேட்டிலிருந்துதான் மண் எடுத்தாக வேண்டும். அதுபோல, ஒடுக்கப்பட்டோரை உயர்த்த வேண்டுமென்றால், உயர்ந்து விட்டவர்களின் 'உரிமை'கள் குறையத்தான் செய்யும். அதனாலேயே அவர்களுக்கு அநீதி விளைவித்து விட்டதாகக் கூச்சலிடுவது அறியாமை; அல்லது, அறிந்தே சொல்லும் பொய்.

கள்ளுக்கடைகளை அடியோடு ஒழித்தது காங்கிரஸ் ஆட்சி. அதனால், நாடார்—கிராமணி எனும் சாதிப்பெயர்கள் தாங்கிய தமிழகத்தின் பழங்குடி மக்கள் பாதிக்கப்பட்டனர். தெருக்களில் திருவோடு தாங்கிப் பிச்சை எடுக்கும் அளவுக்கு தாழ்த்தப்பட்டு விட்டனர். அதனாலேயே மதுவிலக்குச் சட்டத்தைக் கொண்டுவந்தவர்களுக்கு நாடார் சாதியின் மீது பகைமை என்று கூறுவது? அவ்வாறு நாடார், கிராமணி சாதியினரில் யாரேனும் கூறியதுண்டா? இல்லையென்பதை எல்லோரும் அறிவர். அப்படியிருக்க, அறிவில் பிற சாதி மக்களைவிட தாங்களே உயர்ந்தவர்கள் என்று பெருமை பேசிக்கொள்ளும் பிராமண சகோதரர்கள், பிற்பட்ட மக்களுக்கு நீதிவழங்கும் திட்டங்களை பிராம்மண சாதிகளுக்கு விரோதமாகக் கொள்வானேன்?

சாதி வேற்றுமைகளை ஒழிப்பதுதான் தேசிய வாதிகளின் குறிக்கோள். ஆனால், வேற்றுமை விளைவித்தவர்கள் அதன் விபரீதப் பலனையும் அடைந்தே தீர வேண்டும். அதைத் தடுத்து நிறுத்த எவராலும் இயலாது. வகுப்புவாத நியமன உத்தரவு சாதி வேற்றுமைகளை ஒழிக்கா விட்டாலும், சாதிகளிடையே உள்ள பொருளாதார ஏற்றத்தாழ்வுகளை போக்குவதற்கேனும் துணைசெய்கிறது என்பதில் ஐயமில்லை.

வகுப்புவாரி பதவிகளைப் பிரித்துக் கொடுப்பது என்றகொள்கையை தேசீயவாதிகள் ஏற்றுக்கொள்வது இதுதான் முதல் தடவையல்ல. 1935-ம் வருடத்திய அரசியல் சட்டத்தில், முஸ்லிம்களின் தனித்தொகுதிக் கொள்கை அங்கீகரிக்கப்பட்டது. பிரிட்டிஷார் செய்த இந்த முடிவை காந்தியடிகளின் ஆலோசனையின் பேரில் காங்கிரஸ் மகாசபையும் ஏற்றுக் கொண்டது. இதை ஆட்சேபித்து பண்டித மாளவியா, எம். எஸ். ஆனே போன்றவர்கள் காங்கிரசை விட்டு வெளியேறியதையும் அம் மகாசபை பொருட்படுத்த வில்லை. பிரிட்டிஷாரின் வகுப்புத்தீர்ப்பு நியாயமென்ற காரணத்தாலா காங்கிரஸ் அதை ஆதரித்தது? இல்லை. முஸ்லிம்களின் அவநம்பிக்கையைப் போக்கி இந்து-முஸ்லிம் தேசிய ஒற்றுமையை ஏற்படுத்த முடியும் என்ற நம்பிக்கையினாலேயே, காங்கிரஸ் அதை ஆமோதித்தது. வரப் போகும் புதிய அரசியலில்கூட முஸ்லிம்களுக்கு ஸ்தானங்கள் ஒதுக்கிவைக்கும் கொள்கை அங்கீகரிக்கப்பட்டுள்ளது. அரசாங்கப் பதவிகளிலும்கூட முஸ்லிம்கள் விஷயத்தில் அரசாங்கம் கையாண்ட வகுப்புவாதக் கொள்கையைக் காங்கிரஸ் ஆட்சேபிக்க வில்லை. இது போலத்தான் சென்னை அரசாங்கம், வகுப்புவாரி நியமனக் கொள்கையை தவிர்க்க முடியாத தீமையாக-தற்காலிகக் கொள்கையாக-எண்ணி அங்கீகரித்துள்ளது. வகுப்புவாரி நியமனத்தை அங்கீகரிப்பதன் மூலம், பிராமணர்கள்மீது, பிராமண ரல்லாதாருக்குள்ள ஐயத்தைப்போக்க முடியும். அதன் மூலம் பிராமண—பிராமண ரல்லாதார் பகைமை மாயும் என்பது இன்றைய அமைச்சர் குழுவின் நம்பிக்கை. வகுப்புவாரி நியமன உத்தரவால், பிராமணர்களுக்குரிய விகிதாச்சாரப் பதவிகள் குறைந்துவிடப் போவதில்லை. அவர்கள் ஜனத்தொகைக்குரிய எண்ணிக்கைக்கு பதவிகள் கிடைக்குமென்று வகுப்புவாரி நியமனக் கொள்கையால் உத்தரவாதம் ஏற்படுகிறது. மேலும், எந்த ஒரு பதவிக்கேனும் பிராமணரல்லாதாரில் தகுந்தவர்கள் கிடைக்கவில்லை யென்றால், அந்தப் பதவிக்கு, பிராமணர்கள் நியமிப்பதை வகுப்புவாரி உத்தரவு ஆட்சேபிக்கவில்லை; அங்கீகரிக்கிறது. இந்த வகையில், இப்போதுகூட அரசாங்க இலாக்காக்கள் பலவற்றில் பிராமணர்கள் தங்கள் விகிதாச்சாரத்திற்கு அதிகமாகவே உத்தியோகங்களைப் பெற்றிருக்கின்றனர்.

பிராமணர்களாகட்டும், பிராமணரல்லாதாராகட்டும், எல்லோரும் ஒன்றை மறந்துவிடக்கூடாது. அதாவது, நம்மை யறியாமலே, சாதி சமய பேதமற்ற ஒரு சமதர்ம சமுதாயத்தை நோக்கி நாம் சென்று கொண்டிருக்கிறோம். இங்குமங்குமாக ஒரு சிலர் போட்டு வரும் வகுப்புவாதக் கூச்சல்களெல்லாம் அடுத்த கணத்தில் மாள விருக்கும் நோயாளியின் மரணக் கூச்சல் போன்றதே.

வகுப்புவாரி நியமன உத்தரவை தேசீய வாதிகள் ஏற்றுக் கொண்டு விட்டதால், இத்தனை நாளும் அதை தேசியத்திற்கு எதிராகப் பயன்படுத்தியவர்களின் வேலை முடிந்துவிடுகிறது. பிராமணர்–பிராமணரல்லாதார் ஆகிய இருதரப்பு வகுப்புவாதிகளையும் ஏக காலத்தில் எதிர்த்து வெற்றிக் கொள்ள வேண்டுமானால், பிற்பட்ட வகுப்புகளுக்கு நீதி வழங்கும் வகுப்பு வாரி நியமனக் கொள்கையை தேசிய வாதிகள் அங்கீகரித்தே ஆகவேண்டும்.

வகுப்புவாதக் கொள்கை விஷத்திற்குச் சமமானதுதான்! ஆனால், விஷம் எதிரி கையிலிருக்கும்போதுதான் அதற்கு நம்மைக் கொல்லும் சக்தி உண்டு. நாமே எடுத்துக் கொண்டால், அதை சுத்தப்படுத்தி மருந்தாக்கிக் கொள்ளலாம். அப்போது அது நமது பிறவியை அழிக்கும் நஞ்சாகாது; பிணி தீர்க்கும் அமிர்தம் ஆகும். அது போலவே, வகுப்பு வாரி நியமனக் கொள்கை ஜஸ்டிஸ் கட்சிக் காலத்தில் தேசியத்தைக் கொல்லும் விஷயமாய் இருந்தது. இன்றோ, அது தேசிய ஆட்சியின் ஆயுளை வளர்க்கும் அமிழ்தமாகிறது.

---

## புதுவித ரேடியோ

மோட்டார் கார்களில் உபயோகிக்கக் கூடிய புதுவித குறுகிய அலை மத்திய அலை ரேடியோக்களை பிரிட்டிஷ் தொழிற்சாலையொன்று தயாரித்து வருகிறது. 'மாஸ்டர் ரேடியோ மாடல் 701' என அழைக்கப்படும் இந்த ரேடியோ செட்டின் அகலம் 10 அங்குலத்திற்கும் குறைவானதாகும். இந்த ரேடியோ செட்டில் ஸ்விட்சைப் போடுவதற்கும் அணைப்பதற்கும், 'வால்யூம்' கண்ட்ரோலுக்குமான ஒரு 'நாபு'ம், தேவைப்படும் ஸ்டேஷனுக்குத் திருப்புவதற்கான ஒரு 'நாபு'ம் உள்ளன. இவை தவிர குறுகிய அலை ஸ்டேஷன்களுக்குத் திருப்புவதற்கான ஒரு பிடியும், அனாவசியமான இரைச்சல்களை குறைப்பதற்கான மற்றொரு கண்ட்ரோலும்கூட இதில் உள்ளன.

மோட்டார் ஓடிக்கொண்டிருக்கையில் குறுகிய அலை ரேடியோ நிலையங்களுக்கு நாம் 'ட்யூன்' செய்யமுடியும். லண்டனுக் கருகில் இந்த ரேடியோ முதலாவது தடவையாக பரீட்சை செய்யப்பட்டபோது மத்திய, குறுகிய அலை ஸ்டேஷன்கள் (ஆஸ்திரேலியா, அமெரிக்கா) ஒலி பரப்பும் நிகழ்ச்சிகள் தெளிவாகக் கேட்டன.

---

